# The Knavery of Kalappa

## AN ADAPTATION OF
## MOLIERE'S FAMOUS DRAMA
### "The Knavery of Scalpin"

IN TAMIL

BY

**Rao Bahadur P. SAMBANDAM, B.A., B.L.,**

Author of :

"The Two Sisters," "Galava," "Manohara," "The Curse of Urvasi," "The Merchant of Vanipura," "Fate and Love," "Simhalanatha," "Pushpavalli," "Amaladitya," "Magapathi," "Farces," "Siruthondar," "The Golden Fetters," "True Love," "The Bandit Chief," "Bricks between" "At any cost," "The Fair Ghost," "The Wedding of Valli," "The Eye of Love," "Vijayarangam," "As you like it," "Ratnavali," "Lord Buddha," "The Tragedy of Silence," "The Good Fairy," "Geetha Manjari," "The True Brother" "As We Sow-So We Reap," "Malavikagnimitra," "Chandrahari," "The Demon Land," "Sabapathy" Part I, "The Pongal Feast" or "Sabapathy" Part II, "A Rehearsal" or "Sabapathy," Part III, "Blessed in a Wife," "The Dancing Girl," "Subbadra—Arjuna," "Karna the Giver," "Sahadeva's Stratagem," "The Surgeon General's Prescription" "Vichu's Wife," "Sakuntala," "Vikramorvasi," "The Point of View" "The Two Selves" "The Tragic Denouement" "The Sub-Asst. Magistrate of Sultanpet" "Harischandra," "Blind ambition" "Markandeya", "Sarangadhara" "The Two Friends," etc., in Tamil, and "Harischandra," and "Yayathi" in English :

*FIRST EDITION.*

Madras

PRINTED BY INDIA PRINTING WORKS.

 1931 [Price Per Copy

# காளப்பன் கள்ளத்தனம்

இந்த நாடகம்

மாலியர் எனும் நாடகாசிரியர் பிரெஞ்சு பாஷையில் எழுதிய

## தி நேவரி ஆப் ஸ்காபின்

என்னும் நாடகத்தை அனுசரித்து

ராவ்பஹதூர்

**ப. சம்பந்த முதலியார்,** பி.ஏ., பி.எல்.,

அவர்களால் தமிழில் இயற்றப்பட்டது.

**இந்நூலாசிரியரால் இயற்றப்பட்ட மற்றத் தமிழ்நூல்கள் :—**

லீலாவதி - சுலோசனை, சாரங்கதரன், மகபதி, மனோஹரன், நற்குல தெய்வம், ஊர்வசியின் சாபம், இடைச்சுவர் இருபுறமும், என்ன நேர்ந்திடினும், விஜயரங்கம், காதலர் கண்கள், பேயல்ல பெண் மணியே, தாசிப்பெண், மெய்க்காதல், பொன் விலங்குகள், சிம்ஹளநாதன், விரும்பிய விதமே, சிறுத்தொண்டர், கால வரிஷி, ரஜபுத்ரவீரன், உண்மையான சகோதரன், ரத்னவளி, புஷ்பவல்லி, கீதமஞ்சரி, பிரஹசனங்கள், அமலாதித்யன், சபாபதி முதற்பாகம், பொங்கல் பண்டிகை அல்லது சபாபதி இரண்டாம் பாகம், ஓர் ஒத்திகை அல்லது சபாபதி மூன்றாம் பாகம், வள்ளி மணம், முற் பகற் செய்யின் பிற்பகல் விளையும், புத்த அவ தாரம், விச்சுவின் மனைவி, வேதாள உலகம், மனைவியால் மீண்டவன், சந்திரஹரி, சுபத்திரார்ஜுனா, கொடையாளி கர்ணன், சஹதேவன் சூழ்ச்சி, நோக்கத்தின் குறிப்பு, இரண்டு ஆத்மாக்கள், சர்ஜன் ஜெனரல் விதித்த மருந்து, மாளவிகாக்னிமித் ரம், விபரீதமானமுடிவு, சுல்தான் பேட்டை சப் அசிஸ்டென்ட் மாஜிஸ்டிரேட், சகுந்தலை, விக்கிரமோர்வசி, முதலியன.

---

முதற் பதிப்பு.

---

சென்னை இந்தியா அச்சுக்கூடத்தில் அச்சிடப்பட்டது.

 1931 [விலை ·

INSCRIBED

THE BELOVED MEMORY OF

MY PARENTS

P. VIJIARANGA MUDALIAR

AND

P. MANICKAVELU AMMAL

AND

MY FRIEND

C. RANGAVADIVELU.

# முகவுரை

இங்கிலாந்து தேசத்தில் ஷேக்ஸ்பியர் மஹா நாடககவி எப்படி பெயர் பெற்றவரோ, அப்படியே பிரான்சு தேசத்தில் மாலியர் என்பவர் பெயர் பெற்றவர்; அப்பிரான்சு பாஷையில் பல நாடகங்கள் எழுதி யிருக்கிறார்; அதில் "தி நேவரி ஆப் ஸ்கால்பின்" என்பது ஒன்றும்; இந் நாடகம் அதன் தமிழ் அமைப்பாகும்.

இந்நாடகத்தையாவது, அல்லது நான் பதிப்பித்துள்ள எனது மற்ற நாடகங்களையாவது எந்த சபையாராவது ஆடவேண்டுமென்றால், முன்னதாக எனக்குச்சேரவேண்டிய ராயல்டி கட்டணத்தைக் கட்டி, என் அனுமதி பெற்றே, பிறகு ஆடவேண்டும். இல்லாவிடில் காபிரைட் சட்டப்பிரகாரம், போலீஸ் கோர்ட்டில் தாவாவுக்குள்ளாவார்கள் என்பதை இதனால் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

ஒரு கிரந்த கர்த்தாவுக்குச் சேரவேண்டிய ராயல்டி, அவர் ஆயுசு பரியந்தமும், அதற்குமேல் 50 வருஷகாலம் அவரது வார்சுகளுக்கும், உரித்தாயது என்பதை எல்லோரும் அறிவார்களாக.

நான் அச்சிட்டிருக்கும் புஸ்தகங்கள் வேண்டியவர்கள் சென்னை ஆச்சாரப்பன் வீதி 70-வது கதவிலக்கமுள்ள வீட்டிலும், எல்லாப் பிரபல புஸ்தக வியாபாரிகளிடமும் வாங்கிக்கொள்ளலாம்.

3—8—31
சென்னை.

இப்படிக்கு,
ப. சம்பந்தம்.

# காளப்பன் கள்ளத்தனம்

## நாடக பாத்திரங்கள்

| | | |
|---|---|---|
| அழகாநந்தன் | .... | அஸ்வதேவனுக்கும் சரோஜதளநேத்ரிக்கும் தந்தை. |
| கௌரிநாதன் | .... | லீலாநாதனுக்கும் யாகசேனைக்கும் தந்தை. |
| அஸ்வதேவன் | .... | அழகாநந்தர் புதல்வன், யாகசேனையின் காதலன். |
| லீலாநாதன் | .... | கௌரிநாதன் புதல்வன், சரோஜதளநேத்ரியின் காதலன். |
| சரோஜதளநேத்ரி | .... | குறக்கூட்டத்தில் வாழும் ஒரு பெண்; உண்மையில் அழகாநந்தர் புதல்வி, லீலாநாதன் காதலி. |
| யாகசேனை | .... | கௌரிநாதன் புதல்வி, அஸ்வதேவன் காதலி. |
| காளப்பன் | .... | லீலாநாதன் வேலையாள். |
| செல்வநேசன் | .... | அஸ்வதேவன் வேலையாள். |
| நாராயணி | .... | யாகசேனையின் தாதி. |
| காரளன் | .... | ஒரு துடுக்குப் பையன். |

இரண்டு வேலையாட்கள்.

**கதை நிகழ் இடம்:—நாகபட்டணத்தில்.**

# காளப்பன் கள்ளத்தனம்

## முதல் அங்கம்

இடம்—ஹரகாந்தன் வீட்டில் ஓர் அறை.

அஸ்வதேவனும் செல்வநேசனும் வருகிறார்கள்.

அ. ஹா ! காதலன் செவிக்கு எத்துணை கடூரமான சமாசாரங்கள்! என் ஸ்திதியை என்னென்று சொல்வேன் !—செல்வநேசா, துறைமுகத்தில் என் தந்தை திரும்பி வருகிற சமாசாரம் இப்பொழுது தான் கேட்டாயல்லவா ?

செ. ஆம், கேட்டேன்.

அ. அவர் வரப்போகிறார்—இன்று காலையிலேயே ?

செ. இன்று காலையிலேயே.

அ. எனக்கெப்படியாவது கலியாணம் செய்து வைக்க வேணுமென்னும் தீர்மானத்துடன் வருகிறார் ?

செ. தீர்மானத்துடன் வருகிறார்.

அ. கௌரிநாதர் பெண்ணுடன் ?

செ. கௌரிநாதர் பெண்ணுடன்.

அ. இதற்காக அப்பெண்ணும் தாராதீவத்திலிருந்து இங்கு வருகிறாள் ?

செ. இங்கு வருகிறாள்.

அ. இந்த சமாசாரம் உனக்குத் தெரிவித்தார் என் சிற்றப்பா ?

செ. உங்கள் சிற்றப்பா.

அ. இந்த விஷயத்தை என் தகப்பனார், அவருக்குத் தெரிவித்தார்—ஒரு கடித மூலமாக ?

செ. ஒரு கடிதம் மூலமாக.

அ. நீசொல்கிறபடி, இந்தச் சிற்றப்பாவுக்கு, நம்முடைய சமாசாரம் எல்லாம் தெரியும் ?

செ. எல்லா சமாசாரமும் தெரியும்.

அ. வாடாப்பா, ஏதாவது சொல், நான் சொல்வதற்கெல்லாம் இம் மாதிரியாக கொனுக்கோல் கொடுத்துக் கொண்டிராதே.

சே. நான் சொல்வதற் கென்ன இருக்கிறது? ஒரு சமாசாரமும் நீங்கள் விடவில்லையே ; எல்லாவிஷயங்களையும் நடந்தபடி நீர் கூறி விட்டீரே.

அ. இந்த கஷ்ட ஸ்திதியில் என்ன செய்வதென்றுவது, எனக்கு ஏதாவது புத்தி மதியாவது சொல்.

சே. எங்கப்பாணை, உங்களைப்போல் தான் நானும் கலவரத்திலிருக் கின்றேன். எனக்கு யாராவது புத்தி சொல்ல வேண்டுமிப் பொழுது.

அ. பாழாய்ப்போக !—அவர் திடீரென்று திரும்பிவந்து என்னை இக்கஷ்டத்திலா வைக்கிறது !

சே. அதே ஸ்திதியில் தான் நானுமிருக்கிறேன்.

அ. நடந்த சமாசாரமெல்லாம் என் தகப்பனுருக்குத் தெரிந்ததோ, என்ன நேரிடுமென்று எனக்குத் தெரியும்; திடீரென்று கோபம் பொங்கி வார்த்தை களால் என்னை வெளுக்கப் போகிறார் !

சே. வார்த்தைகளால் வெளுத்தால் பெரிதல்ல ; என் கணக்கு அத னுடன் பைசலானல் சந்தோஷப் படுவேனே. நீர் செய்த குற் றத்திற்காக நான் அதைவிட அதிக கஷ்டம் அனுபவிக்க வேண் டும்போல் தோற்றுகிறது எனக்கு ; காற்றும் மழையுமாய்க் கலந்து கொண்டிருக்கிறது, அது என் முதுகின் பேரில் கழி யடிகளாக இறங்கும் போலிருக்கிறது !

அ. ஈசனே ! ஈசனே ! இந்த கஷ்டங்களினின்றும் நான் எப்படித் தப்புவேன் !

சே. இந்த கஷ்டங்களுக்குள் அகப்படுமுன், அதை யெல்லாம் யோசித்திருக்க வேண்டும்.

அ. அகாலமான இப்போதனைகளால் என் ஆவியையே போக்கு கிறாய் நீ !

சே. மூடத்தனமான உமது நடவடிக்கைகளால், எனதுயிரை நீர் முன்பு போக்கிவிடுவீர் !

அ. நான் என்ன செய்வது ? நான் என்ன தீர்மானிப்பது ?— என்ன பரிகாரம் செய்வது ?

காளப்பன் வருகிறான்.

கா. நமஸ்காரம் அஸ்வதேவரே ; க்ஷேமம் தானே ?—என்ன உங் களுக்கு ? ஒரு மாதிரியாயிருக்கிறீர், என்ன சமாசாரம் ?

இந்த முகவாட்டத்திற்கெல்லாம் காரணம் என்ன? மிகுந்த துர்ப்பாக்கிய ஸ்திதியிலிருப்பதுபோல் காண்கிறீர்?

அ. ஹா! காளப்பா, நான் அழிந்தேன்! எனக்கு இன்ன செய்வதென்று தோன்றவில்லை! இவ்வுலகில் என்னைப்போன்ற துர் அதிர்ஷ்டம் பிடித்தவர்கள் ஒருவருமில்லை!

கா. ஏன் அப்படி?

அ. எனக்கு நேரிட்டதைப்பற்றி நீ கேள்விப்படவில்லையா?

கா. இல்லை.

அ. என் தகப்பனார் கௌரிநாதருடன் வருகிறார்; அவர்களிருவரும் எனக்குக் கலியாணம் பண்ணிவைக்கத் தீர்மானித்திருக்கிறார்கள்.

கா. உம்! இதில் என்ன அப்படிப்பட்ட துர் அதிர்ஷ்டம் இருக்கிறது?

அ. ஐயோ! என் வருத்தத்தின் காரணம் நீ அறியாய்.

கா. அறியேன் வாஸ்தவமாய், ஆகவே அதை உடனே எனக்குத் தெரிவிக்க வேண்டியது உம்முடைய பாரமாகும். உம்மைப் போன்ற வாலிபர்களுடைய சமாசாரங்களையெல்லாம் அறிந்து, அவர்களுடைய மன வருத்தத்தை நீக்குவதற்கு எப்பொழுதும் சித்தமாயிருக்கிறேன்.

அ. ஹா! காளப்பா, இப்போது நானிருக்கும் கஷ்டஸ்திதியினின்றும் கரையேற, ஏதாவது மார்க்கம் கண்டு பிடிப்பாயாயின், ஏதாவது யுக்தி செய்வாயாயின், என் ஆயுள் பர்யந்தமும்,— அதற்கு மேலும்— உனக்குக் கடமைப்பட்டவனாயிருப்பேன்.

கா. உம்மிடம் வாஸ்தவத்தைச் சொல்வதானால், நான் செய்ய வேண்டும் என்று தீர்மானிப்பேனாயின், இந்த உலகத்தில் அசாத்தியம் என்பதே எனக்குக் கிடையாது. கூர்மையான புத்தியைக்கொண்டு செய்யவேண்டிய யுக்திகளுக்குத் தக்க பாண்டித்யம் எனக்கு பகவான் கொடுத்திருக்கிறார் என்பதற்குச் சந்தேகமேயில்லை; இந்த புத்தி சாதுர்யமான யுக்திகளை, புத்தியில்லாத மடையர்கள் திருட்டுத்தனம் என்று கூறுகிறார்கள்; சூழ்ச்சிகள் செய்வதிலும், பாசாங்கு செய்வதிலும், என்னைவிட கெட்டிக்காரன் இவ்வுலகிலில்லை யென்று, தற்புகழ்ச்சியின்றி, நானே சொல்லிக்கொள்ளலாம்; இந்த உத்தமமான உத்தியோகத்தில் என்னைவிடப் பெயர் பெற்றவர் இல்லை யென்றே சொல்லவேண்டும்.—ஆயினும்—வாஸ்தவமாக, தற்காலத்தில்

யோக்யதைக்கு தக்கபடி பரிசுகொடுத்து ஆதரிப்பார் கிடையாது. ஒருசின்ன விஷயத்தில் எனக்குக் கஷ்டம் நேரிட்டபின், இதையெல்லாம் விட்டு விட்டேன்.

அ. அது என்ன அது ? என்ன சமாசாரம் காளப்பா ?

கா. நியாயாதிபதியும் நானுமாக ஒரு சொல்ப விஷயத்தில் எதிர்க்க வேண்டி வந்தது ?

அ. நியாயாதிபதியுடனா ?

கா. ஆம், எங்களிருவருக்கும் கொஞ்சம் மனஸ்தாபம் நேரிட்டது.

அ. உனக்கும் நியாயாதி பதிக்குமா ?

கா. ஆம், அவர் எனக்குத் தக்கபடி நியாயம் சொல்லவில்லை, அது முதல் நன்றி கெட்ட இவ்வுலகத்தை வெறுத்து, இனிமேல் ஒன்றும் செய்வதில்லை என்று தீர்மானித்தேன்.—இருந்த போதிலும்— உங்கள் சமாசாரத்தைச் சொல்லுங்கள்—கேட்கிறேன்.

அ. காளப்பா, கௌரிநாதரும் என் தகப்பனாரும், இரண்டு மாதங்களுக்கு முன்பாக, இரண்டு பெயரும் ஒன்றாய்ச் சேர்ந்து சில வர்த்தக விஷயமாய், கடல் யாத்திரையாகப் போனார்கள் என்பது, உனக்குத் தெரியுமே.

கா. ஆம், தெரியும்.

அ. லாவண்யனையும் என்னையும் எங்கள் தகப்பன்மார்கள் இங்கு விட்டுப் போனார்கள் ; என்னை செல்வநேசன் வசத்திலும், லாவண்யனை உன் வசத்திலும்.

கா. ஆம், என் வேலையை நான் சரியாகச் செய்து முடித்தேனல்லவா ?

அ. கொஞ்சநாள் பொறுத்து, லாவண்யன் குறவர்கள் கூட்டத்திலிருந்த ஒரு பெண்ணைக் கண்டு அவள்மீது காதல் கொண்டான்.

கா. அதுவும் தெரியுமெனக்கு.

அ. நாங்கள் இருவரும் மிகுந்த சிநேகிதர்களானபடியால், தான்காதல்கொண்ட விஷயத்தைப்பற்றி எனக்கு இரகசியமாய்த் தெரிவித்து, தன் காதலியைக் காண என்னை அழைத்துச் சென்றான். அவளை நான் பார்த்தபொழுது அவள் அழகாகத்தான் தோற்றப்பட்டாள்; ஆயினும், நான் அவளைப்பற்றி எண்ண வேண்டுமென்று என் நண்பன் நினைத்தபடி, அவள் அவ்வளவு அழகாயில்லை.எந்நேரமும் அவளைப்பற்றியே என்னிடம் பேசிக்

கொண்டிருந்தான்; அவளது அழகைப் பற்றியும் ஒய்யாரத்தைப் பற்றியும், ஒரு நிமிஷமும் விடாது பேசிக்கொண்டிருந்தான்; அவளது புத்திகூர்மையைப் புகழ்ந்து, அவள் வார்த்தையாடும் அழகைப்பற்றி, அடங்காத சந்தோஷத்துடன் வர்ணித்தான்; இவ்வுலகில், அவள் வார்த்தையின் புத்தி சாதுர்யத்தை விட மேம்பட்டது வேறொன்றும் கிடையாது என்று நான் எண்ணும்படி அவள் பேசிய வார்த்தைகளை யெல்லாம் ஒன்று விடாது என்னிடம் உரைத்தான்.

கா. இதெல்லாம் எங்கு போய் முடிகிறதென எனக்குத் தெரியவில்லை.

அ. ஒருநாள், அவனது காதலியை வளர்த்து வந்தகுறவர்கள் கூட்டத்திற்கு அவனுடன் நான் போய்க் கொண்டிருந்த பொழுது, பக்கத்து சந்தில் ஒரு வீட்டில், கொஞ்சம் கூச்சலும் அதிக அழுகையும் நாங்கள் கேட்டோம். நாங்கள் என்னவென்று விசாரிக்க, ஒரு பெண்பிள்ளை, நாங்கள் அங்கு போனால், அங்கு இரண்டு அந்நிய தேசஸ்திரீகள் இருப்பதாயும், அவர்கள் ஸ்திதியைக் கண்டால் கருங்கல்லும் உருகும் மென்றும், பரிதாபம் என்பது எங்கள் மனதில் கொஞ்சமேனும் இருக்குமாயின், அவர்களைக்கண்டு நாங்கள் பச்சாத்தாபப் படுவோமென்றும், பல பெருமூச்சுகளுடன் தெரிவித்தாள்.

கா. இதெல்லாம் எங்குபோய் முடிகிறது ?

அ. இப்புதுமையைக் காணவேண்டு மென்று ஆவல்கொண்டவனாய் லாவண்யனிடம், அதைப்போய்ப் பார்க்கலாமென்று வற்புறுத்தினேன். அங்கு சென்று ஒரு அறைக்குள் நுழைந்த பொழுது, அங்கு ஒருகிழவி மரணாவஸ்தையிற் கிடந்தாள்; அவள் பக்கலில், ஒரு வேலைக்காரி, கோவென்று அழுது கொண்டிருந்தாள், ஒரு அழகிய பெண் கண்ணீர் ஆறாக பெருக நின்றுக் கொண்டிருந்தாள். அப்பெண்ணின் அழகையும், பரிதாப நிலையையும் வர்ணிக்க, என்னால் முடியவே முடியாது.

கா. ஆஹா !

அ. அவள் இருந்த ஸ்திதியில் வேறு யாராவது இருந்திருப்பார்களாயின் அது அவலட்சணமாயிருந்திருக்கும்; ஒரு பழைய பாவாடை ஒன்றைக் கட்டிக் கொண்டு, கிழிந்த அங்கவஸ்திரம் ஒன்று அணிந்து கொண்டிருந்தாள்; தலைமயிர் அவிழ்ந்து

தொங்கிக் கொண்டிருந்தது தோட்களின் மீது; இப்படி இருந்தும், அவளது அழகானது ஆயிரம் கண் கொண்டு பார்க்கத்தக்கதாயிருந்தது; அவளைப் போன்ற அணங்கை நான் அவனியில் கண்டதே யில்லை !

கா. அப்புறம் வரப் போகிறது தெரிகிறது.

அ. அவள் இருந்த ஸ்திதியில், நான் பார்த்தபடி, நீ அவளைப் பார்த்திருப்பாயாயின் அவனியில் அவளுக்கு இணையேயில்லையென்று நீ கூறியிருப்பாய்.

கா. ஓ! அதற்குச் சந்தேகமேயில்லை! அப்பெண்ணைப் பார்க்காமலே, அப்பெண்மணியைப் போன்ற அழகிகள் அகிலத்தி லில்லை யென்று நம்பிவிடுவேன்.

அ. அழும்பொழுது மற்றவர்கள் முகத்தை அசங்கியமாகத் தோற்றச் செய்கிறதே, அப்படியில்லை அவள் வரைக்கும்; பார்த்தவர் பரிதாபப் படும்படியாய் என்ன ஒயிலாய் அழுதாள் தெரியுமா? அவள் மனத்துயரமானது பார்த்தவர்கள் மனதை யெல்லாம் கவரும்படியானதா யிருந்தது.

கா. நன்றாய்த் தெரிகிறது.

அ. தனது தாயாரென அவள் அழைத்து, மரணாவஸ்தையிலிருந்த அந்த ஸ்திரீயின் உடலின்மீது, வாத்ஸல்யத்தோடு அவள் விழுந்தபொழுது, பக்கத்திலிருந்தவர்களையெல்லாம் கண்ணீர் விடும்படிச் செய்தாள்; அப்பேதையின் நற்குணத்தைக் கண்டு பரிதாபப் படாதவர்கள் ஒருவருமில்லை.

கா. எனக்கே என்ன பரிதாபமாயிருக்கிறது !—தெரிகிறது—அப்பெண்மணியின் நற்குணமானது உம்மை அவள்மீது காதல் கொள்ளும்படிச் செய்தது.

அ. ஆ! காளப்பா! கல்மனமுடைய காட்டுமுராண்டியும் அவள் மீது காதல் கொண்டிருப்பான்.

கா. சந்தேகமென்ன? யாரால் அதைத் தடுக்கமுடியும்?

அ. துக்கப்பட்டுக் கொண்டிருந்த அப்பெண்மணிக்கு சில தேறுதல் வார்த்தைகள் நான் கூறிவிட்டு, பிறகு நாங்கள் வந்து விட்டோம். அதன் பிறகு, லாவண்யனை அவளைப்பற்றி நீ என்ன எண்ணுகிறாய் என்று கேட்க, "ஏன், சுமாராகத் தான் இருக்கிறாள்" என்று ஒருவாறு மொழிந்தான்; அப்பெண்மணியைப் பற்றி இவ்வளவு சாதாரணமாகச் சொல்லவே, எனக்கு மிக

வும் கோபம் பிறந்து, என்மனதை அம்மாது சிரோமணி கவர்ந்ததைப்பற்றி, அவனிடம் தெரிவிக்க எனக்கிஷ்டமில்லை.

சே. உங்கள் கதையை நீங்கள் சுருக்கிச் சொல்லாவிட்டால், நாளை வரையில் நாம் இங்கிருக்க வேண்டும். பத்துவார்த்தையில் முடித்து விடுகிறேன் இதை. அந்த க்ஷணமுதல் இவர்காதல் அதிகரித்தது ; தன் காதலியின் துயரத்தை ஆற்றுவதற்காக அவளிடம் போகாமல் இவரால் உயிர் வாழ முடியவில்லை ; அந்தப் பெண்ணின் தாயார் மடிந்துபோகவே, அப்பெண்ணுக்கு சவரட்சணை கர்த்தாவாகிய அந்த வேலைக்காரி, இவர் அடிக்கடி அப்பெண்ணைக் காண்பதைத் தடுத்தாள் ; அதனால் எனது நண்பர் துக்கத்திலாழ்ந்தார், பார்க்கவேண்டுமென்று வற்புறுத்தினார், வேண்டினார், கெஞ்சினார் ; ஒன்றும் பயன்படவில்லை. அப்பெண்ணுக்கு பந்துக்களாவது ஐஸ்வர்யமாவது இல்லாவிட்டாலும், அவள் உயர் குலத்திலுதித்தவளென்றும், அவளை அவர் மணம்புரியாவிட்டால், அடிக்கடி பார்க்கமுடியாதென்றும்,அவருக்குத் தெரிவித்தனர். இந்த இடையூறுகளால், அவருடைய காதலானது அதிகப்பட்டது. ஆலோசனை பண்ணினார், அப்படி இப்படி கலக்கப்பட்டார், துக்கித்தார், வாதித்தார், தீர்மானித்தார்; கல்யாணம் செய்து கொண்டார், மூன்று நாளைக்குமுன்.

கா. உம், தெரிகிறது.

சே. போதாக்குறைக்கு, இன்னும் இரண்டு மாதம் வரையில் வரமாட்டார் என்றெண்ணி யிருந்த, இவருடைய தகப்பனார் திடீரென்று வந்து சேர்ந்தார்; இவர் இரகசியமாக மணந்த விஷயம் இவருடைய சிற்றப்பாவுக்கு எட்டிவிட்டது ; தாரா நகரத்தில் கௌரிநாதர் இரண்டாம் கலியாணம் செய்து கொண்ட அந்த மனைவிக்குப் பிறந்த பெண்ணை இவருக்குக் கலியாணம் செய்யத் தீர்மானித்திருக்கிறார்களாம்.

அ. கஷ்டங்களுடன் கஷ்டமாக இந்த அழகிய பெண்மணி அநாதையாயிருக்கிறாள் ; அவளைக் காப்பாற்ற எனக்குச் சக்தியில்லை.

கா. இவ்வளவுதானா ? இந்த அற்ப விஷயத்திற்காகவா நீங்கள் இரண்டு பெயரும் இவ்வளவு கஷ்டப்படுகிறதாகக் காண்கிறீர்கள் ? ஏண்டாப்பா, இந்த சொல்ப விஷயத்தினின்றும் தப்பி வைக்க வகையறியாது விழிக்கிறாயே ? வெட்கமில்லையா ? தத்தி

ராமன் ! உயரத்திலும் பருமனிலும் உன்தகப்பனார் தாயாரை ஒன்றாய்ச் சேர்த்தது போலிருக்கிறாய் ! உங்கள் விவஹாரங் களையெல்லாம் ஒழுங்கு படுத்துவதற்கு, உன் மூளையைக் கொண்டு ஒரு யுக்தியும் செய்ய முடியவில்லை ; உன் புத்தியைக் கொண்டு ஒரு சூழ்ச்சியும் செய்ய முடியவில்லை ! தூத்தெரி ! உன் மடையபுத்தி மண்ணாய்ப்போக !—இந்த இரண்டு கிழங் களையும் ஏமாற்ற, எனக்குக் காலம் வாய்க்காமற் போச்சுது அந்த காலத்தில் ; இரண்டு பெயரையும் கவிழ்த்து விட்டிருப் பேன் க்ஷணத்தில், அவ்வளவு உயரம்தான் நான் இருந்த போதே, நூறு குத்திரயுக்திகள் செய்து நான் பெயர் பெற் றேன்.—

சே. வாஸ்தவம்தான், ஸ்வாமி உனக்குக் கொடுத்த புத்திக் கூர் மையை எனக்குக் கொடுக்கவில்லை, உன்னைப்போல் நியாயாதி பதியுடன் மனஸ்தாபப் பட எனக்கு மதி கொடுக்கவில்லை ஈசன் !

அ. இதோ என் கண்மணி யாகசேனை !

யாகசேனை வருகிறாள்.

யா. ஹா ! பிராணநாதா ! நாகையிடம் செல்வநேசன் சற்று முன் பாகத்தான் கூறியது உண்மைதானா ? உம்முடைய தகப்பனார் திரும்பிவருகிறாராம், உமக்குக் கலியாணம் செய்யத் தீர்மா னித் திருக்கிறாராமே ?

அ. ஆம் கண்ணே யாகசேனா ! இந்த சமாசாரத்தைக் கேள்விப்பட் டதும் இடிவிழுந்தாற்போல் ஆனேன்.—ஆயினும் இதென்ன? அழுகிறாயே ! ஏன்இந்தக் கண்ணீர் ? உனக்குக் கூறிய கட் டுறுதியினின்றும் ஏதாவது தவறினேன் என் றெண்ணினாயா? அல்லது உன் மீதுள்ளகாதல் குன்றினேன் என்று நினைத் தாயா ?

யா பிராணநாதா ! நீர் என்மீது காதல் கொண்டிருக்கிறீர் என்பதை நம்புகிறேன், அக்காதல் எப்பொழுதும் குன்றாதிருக்கும் என் பது நிச்சயமென்ன ?

அ. கண்ணே ! உன் மீது ஒருமுறைகாதல் கொண்டபின், எவனா வது அவன் ஆயுள்பர்யந்தம் அக்காதல் குன்றுவனோ ?

யா. பிராணநாதா, ஸ்திரீகளுடைய காதலைப்போல் ஆடவர்களு டைய காதல் நீடித்திருப்பதில்லை யென்று கேள்விப்பட்டிருக்கி றேன். ஆண்மக்களுடைய ஆசையானது எவ்வளவு எளிதில்

விர்த்தியடைகிறதோ அவ்வளவு எளிதில் தணிவையுமடைகிறதெனவும் கேள்விப்பட்டிருக்கிறேன்.

அ. ஆ! கண்மணி யாகசேனை! மற்ற வர்களுடைய ஹிருதயம் போலல்ல என் ஹிருதயம், என் உயிருள்ளளவும் உன்மீதுள்ள காதல் குன்றேன் என்பதை உறுதியாய்நம்பு.

யா. உமது வார்த்தையின்படி உமது உள்ளமுமிருக்கிறதென உறுதியாய் நம்ப விரும்புகிறேன்; நீர் என்னவோ வாஸ்தவமாய்த் தான் பேசுகிறீர், சந்தேகமில்லை. உமக்கென் மீதுள்ள காதலைத் தணித்திட வேறொரு காரணம் உதிக்குமோ என அஞ்சுகிறேன். நீரோ உமது தந்தைக் குட்பட்டவர்; அவரோ நீர் வேறொரு பெண்ணை மணக்கவேண்டுமென்று விரும்புகிறார்; என் துர் அதிர்ஷ்டத்தால் அவ்வாறு நேரிடுமாயின் நிச்சயமாய் நான் உயிர் துறப்பேன்.

அ. கண்ணே! யாகசேனை, என்னை உனக்குத் துரோகி யாக்கும் படியான தந்தை இவ்வுலகிலில்லை; உன்னை விடுவதை விட, இந் நாட்டையும், என் உயிரையுமே துறப்பேன் என்று உறுதியாம் நம்பு. நான் அப்பெண்ணை இது வரையில் பாராவிட்டாலும், இவர்கள் எனக்குக் கலியாணம் செய்ய விரும்பும் பெண்மீது, அழியாத வெறுப்பு கொண்டு விட்டேன். கடின சித்த முள்ளவளைக் காண விருப்ப மில்லா விட்டாலும், அவளை இங்கு நான் பாராதபடி சமுத்திரமானது அவளை விழுங்கி விடுமாக! ஆகவே கண்ணே, யாகசேனை அழாதே! உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன். உன் கண்ணீரைக் காண என் மனம் தாளவில்லை,—அவைகளைப் பார்த்தலே என் ஹிருதயத்தைப் புண்ணாக்குகிறது.

யா. நீர் கோருகிறபடியால் என் கண்ணீரைத் துடைத்துக் கொள்ளுகிறேன். ஈசன் எனக்கு விதித்தபடி ஆகிறதெனப் பொறுத்திருக்கிறேன் பொறுமையுடன்.

அ. ஈசன் நமக்கு விதித்தவிதி நன்மையேயாகும்.

யா. அது துன்பமாகாது— நீர் மாத்திரம் என்னைக் கைவிடாதிருந்தால்.

அ. சத்தியமாக உன்னை கைவிடேன்.

யா. ஆனால் நான் சந்தோஷமாயிருக்கிறேன்.

கா. (ஒரு புறமாக) வாஸ்தவத்தில் இப்பெண் வெறுக்கத் தக்கவள் அல்ல; சரியானவள்தான்.

அ. இதோ இருக்கும் ஆள்மாத்திரம் நமக்கு உதவிசெய்யத் தீர்மானித்தால் நம்முடைய கஷ்டத்தினின்றும் கரையேறுவோம்.

கா. மற்றவர்கள் விஷயங்களில் தலையிட்டுக் கொள்ளலாகாதென்று நான் பன்முறை பிரமாணம் செய்திருக்கிறேன்—ஆயினும்—நீங்கள் இரண்டுபெயரும்—என்னை மிகவும் வற்புறுத்தி வேண்டுவதாயின்— ஒருவேளை—

அ. ஹா! உன்னுடைய உதவியைப் பெற உன்னை நான் வேண்ட வேண்டுமாயின், மனப்பூர்வமாய், உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன்—எப்படியாவது எங்களைக் கரையேற்றுவாயாக!

கா. ஏன் அம்மா நீயோ? நீ எனக்கொன்றும் சொல்ல விரும்பவில்லையா?

யா. அவர் வேண்டுவதைப் போல்—நானும், உம்மை மிகவும் வேண்டிக் கொள்ளுகிறேன், எப்படியாவது எங்கள்மீது கருணை கூர்ந்து, எங்களை கஷ்டத்தினின்றும் நிவர்த்திக்க வேண்டும்.

கா. நீங்கள் இரண்டு பெயரும் இவ்வளவு வேண்டும்பொழுது நான் என் தீர்மானத்தினின்றும் மாறவேண்டியதுதான்.—நான் ஒரு மனிதன் என்பதை மறக்கலாகாது—ஆகவே—உங்களுக்கு உதவி புரியலாமென்று தீர்மானிக்கிறேன். (பின்புறமாகக் கையை நீட்டுகிறான்.)

அ. என்னை நம்பு—(ஒரு பொன்னை அக்கையில் வைத்து)

கா. ஓ! அதெல்லாம் சரிதான்!—அம்மா! உனக்கினி கவலைவேண்டாம் வீட்டிற்குப்போ! (யாகசேனை போகிறாள்.) அப்பா—நீ—பயமில்லாதபடி உன் தந்தையைக் காணச் சித்தஞ் செய்.

அ. உன்னிடமிருந்து இதை ஒளிப்பதற்கெனக் கிஷ்டமில்லை, அவர் வருகிறாரெனக் கேட்டவுடன், முன்பாகவே நான் பயத்தால் நடுங்கினேன். வாஸ்தவமாக எனக்கு அவரிடம் நிரம்ப பயம்; அதைவிட்டகல முடியவில்லை என்றால்.

கா. ஆயினும், அவரைப் பார்ப்பது முதல் நீர் மிகவும் மனவுறுதியுடையவனாகத் தோற்றவேண்டும்; இல்லாவிட்டால் உம்முடைய கோழைத் தனத்தையறிந்து உம்மை யொரு குழந்தையைப்போல் நடத்துவார். வாரும், இப்போது தயார் செய்து கொள்ளுமும்மை. கொஞ்சம் தைரியம்தான் வேண்டியது; அவர் என்ன சொன்ன போதிலும், திட்டமாய் பதில் உரைக்க மனதில் தீர்மானம் செய்துகொள்ள வேண்டும்,

அ. என்றால் முடியுமான வரையில் பார்க்கிறேன்.

கா. சரி, இப்பொழுதே முயன்றுபாரும், எப்படி நடந்து கொள் வீர் என்று. அவர் முன்னிலையில் எப்படி பேசுவீரோ இப் பொழுதே அதை அப்யசித்துப் பாரும், சரியாக இருக்கிறதா சொல்லுகிறேன்.—பயமில்லாத வனுய்க் காட்டவேண்டும்.— தலை நிமிர்ந்திருக்கவேண்டும்—திடசித்தனுயிருக்கவேண்டும்.—

அ. இப்படியா ?

கா. இப்படி (காட்டுகிறான்)

அ. இப்படியா ? (அவனைப்போல் நின்று முகத்தைச் சுளித்து)

கா. இன்னொரு முறை.

அ. இப்படித்தானே.

கா. சரி!—நான்தான் இப்பொழுதான் பட்டினம் வந்து சேர்ந்த உம்முடைய சொந்த தகப்பனுர் என்று எண்ணிக் கொண்டு அவரிடம் எப்படி பயமில்லாமல் பதில் உரைப்பீரோ அப்படி எனக்கு பதில் உரையும்—ஏனடா! தடிக்கழுதை, மூதேவி, பழமுறம், பாபாசு, துரோகி! என் வயிற்றில் ஏனடா பிறந் தாய் ? உன் மனதுபோல் நடந்து விட்டு என் முன் உன் முகத்தைக் காட்ட தைரிய மிருக்கிறதா உனக்கு ? நான் இல் லாத காலத்தில் என்னை ஏமாற்றி விட்டு, என்னை ஏறெடுத்துப் பார்க்கிருயா ? திருட்டுப்பயலே! நான் உன்னை வளர்த்து வந்ததற்கு இதுதானு பலன் ? இது தானு நீ எனக்குக் காட்ட வேண்டிய மரியாதை ? இது தானு நீ எனக்குச் செய்யும் மரி யாதை ?" வாரும் வாரும்—"படுக்காளிப் பயலே! இத்துணை ஆணவமா உனக்கு ? உன் தகப்பனுர் உத்தரவின்றி நீ ஒரு பெண்ணின் மீது இச்சை கொள்கிருயா ?—அவளைத் திருட் டுத் தனமாய் மணம் புரிகிருயா ? சொல்லடா பதில் திருட்டுக் கழுதை, சொல்!—உன்னுடைய நியாயங்களை யெல்லாம் நான் கேட்கட்டும்"—ஐயோ! இதென்ன இது! திக்பிரமை கொண்ட வர்போல் நிற்கிறீரே!

அ. என்சொந்த தகப்பனுர் பேசுவதைக் கேட்பதுபோலவே இருக் கிற தெனக்கு!

கா. ஆம், அதனுல் தான் மடையனைப்போல் நீர் நடவாதிருக்க வேண்டும்.

அ. என்மனதைத் தேற்றிக்கொண்டு, தைரியமாய் பதில் உரைக் கிறேன்.

கா. வாஸ்தவமாய்.

அ. வாஸ்தவமாய்.

சே. இதோ உம்முடைய தகப்பனுரே வருகிருர்!

அ. ஐஐயோ! நான் போய் விடுகிறேன்! (ஓடிப்போகிருன்.)

கா. ஹா! அஸ்வதேவரே, நில்லும்! நில்லும்!—ஓடிப்போய் விட்டார்! என்ன பயங்காளி!—இருக்கட்டும்—நாம் இங்கிருப்போம், அந்தக் கிழம் வரட்டும்.

சே. நான் அவருக்கு என்ன பதில் சொல்வது?

கா. அதையெல்லாம் எனக்கு விட்டு விடு—என் பின்னுல் நின்று கொண்டு நான் செய்கிறபடி நட.

அழகானந்தர் வருகிருர்.

அழ. இப்படி நடந்ததை யாராவது கேட்டதாவதுண்டா?

கா. (ஒரு புறமாக செல்வநேசனுடன்) சமாசாரம் முன்பே எட்டிவிட்டாற்போலிருக்கிறது. அவர் தலையில் இனி வேறொன்றும் ஏருது!—தனக்குத் தாஞக உரக்கப் பேசுகிருர்.

அழ. இப்படி அதனைப் பிரசங்கித்தனமாய் நடப்பதா?

கா. (ஒருபுறமாக) கொஞ்சம் கேட்போம் பொறு.

அழ. இந்தக் கல்யாணத்தைப்பற்றி அவர்கள் எனக்கு என்ன சொல்லப் போகிருர்களோ பார்ப்போம்!

கா. (ஒரு புறமாக) அதையெல்லாம் யோசித்து வைத்திருக்கிரேம்.

அழ. ஒரு வேளை நடக்கவில்லையென்று சொல்வார்களோ?

கா. (ஒரு புறமாக) இல்லை, அப்படிச் செய்வது யோசனை யில்லை.

அழ. அல்லது அதற்கு ஏதாவது சாக்குசொல்லப் பார்ப்பார்களோ?

கா. (ஒரு புறமாக) இருந்தாலு மிருக்கலாம்.

அழ. ஏதாவது கட்டுக்கதை சொல்லி என் கண்ணில் மண்ணைப் போடப் பார்ப்பார்களோ?

கா. ஒருவேளை.

அழ. அவர்கள் என்ன சொன்னுலும் பயன் படாது.

கா. (ஒரு புறமாக) பார்க்கலாம்.

அழ. என்னை மாத்திரம் மோசம் பண்ண முடியாது.

கா. (ஒரு புறமாக) அதை அவ்வளவு உறுதியாய் நம்பாதீர்.

அழ அந்தத் திருட்டுப்பயலாகிய என்பிள்ளையை அவனிருக்கவேண்டிய இடத்திற்கு அனுப்ப எனக்கு வழிதெரியும்.

கா. (ஒருபுறமாக) அதை அப்புறம்பார்ப்போம்.

அழ. அந்தத் திருட்டுக் கழுதை செல்வநேசனை உதை உதை என்று உதைக்கிறேன்.

சே. (ஒரு புறமாக) என்னை எங்கு மறந்து விட்டாரோ வென்று ஆச்சரியப்பட்டுக் கொண்டிருந்தேன்.

அழ. ஆஹா! இங்கேயடா அப்பா இருக்கிறாய்! குடும்பத்தை யெல்லாம் சரியாகப் பார்த்துக் கொள்பவன்! சிறுவர்களுக்கெல்லாம் நல்வழிபோதிக்கும் உபாத்தியாயன்!

கா. (செல்வநேசன் முன்னின்று அவனை மறைத்து) வாருங்கள் ஐயா, நீங்கள் சுகமாய்த் திரும்பிவந்தது மிகவும் சந்தோஷம்.

அழ. வா அப்பா காளப்பா (செல்வ நேசனிடம்) நான் உனக்கிட்ட கட்டளையை நன்றாக நிறைவேற்றினாய்! என் பிள்ளைநான் ஊரிலில்லாத காலத்தில் மிகவும் புத்திசாலித்தனமாய் நடந்ததாகக் கேள்விப்படுகிறேன்.

கா. நான் காண்கிற வரையில் உங்கள் உடம்பு மிகவும் சௌகரியமாகி இருக்கிறாற் போலிருக்கிறதே?

அழ. இருக்கிறது சுமாராக—(செல்வநேசனிடம்) ஏனடா வாயை மூடிக்கொண்டிருக்கிறாய்? துரோகி! வாயைத் திறந்து ஏதாவது பேசேன்?

கா. தாங்கள் வரும்பொழுது கடல் பிரயாணம் சவுக்கியமாயிருந்ததா?

அழ. ஆமாம். எல்லாம் சவுக்கியமாயிருந்தது!—நான் கொஞ்சம் கண்டிக்க விட்டேன்.

கா. கண்டிக்கவா விரும்புகிறீர்?

அழ. ஆமாம் கண்டிக்கத்தான் விரும்புகிறேன்.

கா. யாரை ஐயா?

அழ. இந்தப் பாதகனை!

கா. ஏன் அந்தப்பாதகனை?

அழ. நான் இங்கில்லாதிருந்த பொழுது நடந்ததைப்பற்றி கேள்விப்பட வில்லையா நீ?

கா. ஏதோ சொல்ப வியவஹாரம் நடந்ததாகக் கேள்விப்பட்டேன்.

அழ. சொல்ப வியவஹாரமாவது! அப்படிப்பட்ட வியவஹாரத்தை அற்பமென்றா சொல்லுகிறாய்?

கா. நீங்கள் சொல்வ தென்னவோ வாஸ்தவந்தான்.

அழ. அப்படிப்பட்ட துணிகரமான விஷயம்!

கா. ஆம் வாஸ்தவம்.

அழ. ஒரு பிள்ளை தன் தகப்பனுடைய உத்தரவின்றி கலியாணம் செய்துக் கொள்வதாவது !

கா. ஆம், அது கொஞ்சம் விசாரிக்வேண்டிய விஷயம் தான். ஆயினும், அதைப்பற்றித் தாங்கள் அதிகமாக காபுரா செய்யக் கூடாதென்று தோன்றுகிற தெனக்கு.

அழ. அப்படி நான் நினைக்கவில்லை ! எவ்வளவு காபுரா செய்ய முடியுமோ அவ்வளவு செய்யப்போகிறேன். என்ன ! என் கோபமானது கொதித்தெழும்ப காரணமில்லையென்றுஎண்ணுகிறாய்?

கா. ஆம் வாஸ்தவமாக. எனக்கும் அப்படித்தானிருந்தது, முதலில் நான் இதைப்பற்றிக் கேள்விப்பட்டபொழுது; உங்களுக்கு மனஸ்தாப முண்டாகுமேயென்று வருந்தினவனாய், உங்கள் பிள்ளையுடன் இதைப்பற்றி கடிந்து பேசினேன். நான் அவரை எவ்வாறு கடிந்தேன், உங்கள் பாத தூளியைத் தன் தலைமேல் வகிக்கவேண்டியவனாகிய அவர் உங்களுக்கு இவ்வாறு மரியாதை குறைவாக நடந்து கொண்டதைப்பற்றி எப்படிப் பிரசங்கம் செய்தேன், இதையெல்லாம் பற்றி அவரை நேராகக் கேட்டுப்பாரும்; நீங்கள்கூட அவரை அவ்வாறு கண்டித் திருக்கமாட்டீர்—ஆயினும் என்னபிரயோஜனம் ?—கடைசியில் நியாயத்திற்கு ஈடுபடவேண்டியதாயிற்று; நான் நினைத்தபடி அவ்வளவுபெருங்குற்றம் அவர் செய்யவில்லையென்று நான் முடிவில் ஒப்புக்கொள்ள வேண்டியதாயிற்று.

அழ. என்னகதை யிதெல்லாம் ? அவளுடைய பூர்வீகம் ஒன்றுமே தெரியாத ஒரு பெண்ணை திடீரென்று கலியாணம் செய்து கொள்வது குற்றமல்ல ?

கா. அவர் என்ன செய்யக் கூடும் பாபம் ! அவர் தலைவிதி அவரை அப்படிச் செய்யும்படி செய்தது.

அழ. ஆஹா ! நான் இதுவரையில் கேட்ட நியாயங்களிலெல்லாம் இதுதான் மிகவும் சிரேஷ்டமானது ! அப்படியாயின், ஒருவன் தன் மனத்திற்குத் தோன்றிய குற்றங்களையெல்லாம் செய்து விடலாம், மோசம் செய்யலாம், கொள்ளையடிக்கலாம், கொலை செய்யலாம், கடைசியில் தன் தலைவிதி அவ்வாறு செய்யும்படிச் செய்தது என்று பதில் சொல்லிவிடலாம் !

கா. ஐயோ ஸ்வாமி ! என் வார்த்தைகளுக்கு சட்டக்கல்வி கற்றவர்களைப்போல் அர்த்தம் செய்து விடுகிறீர்களே ! நான் என்ன

சொல்லவந்தேன் என்றால்—இவ்விஷயத்தில் அவர் தப்பித்துக் கொள்ள வகையில்லாதபடி கட்டப்பட்டார்.

அழ. அவன் அப்படிக் கட்டுப்படுவானேன் ?

கா. உங்களைப்போல் அவ்வளவு புத்திசாலித்தன மில்லாதபடியால்; உங்களுக்கு ஒரு ரகசியம் சொல்கிறேன். இவ்வுலகத்தில் வாலிபர்கள் வாலிபர்களே ! ஒவ்வொரு காரியத்தையும் செய்ய லாமாகூடாதா என்று ஆராய்ந்து பார்த்துச்செய்ய அவர் களுக்கு அவ்வளவு விமரிசை கிடையாது.என் எஜமான்பிள்ளை லாவண்யரைப் பாருங்கள், நான் எவ்வளவோ புத்தி புகட்டியும் எவ்வளவோ கண்டித்தும், உங்கள் பிள்ளையைவிட கேடான காரியத்தைச்செய்துக் கொண்டார் தனக்குத் தானாக ! உங்கள் காலத்தில் நீங்களும் யௌவன முடையவராயிருந்ததில்லையா ? மற்றவர்களைப்போல் நீங்களும் பிழைகள் இழைத்ததில்லையா ? என்று கேட்க விரும்புகிறேன். தங்களுடைய இளமையில் தாங்களும் பல பெண்களை இச்சித்ததாகவும், அக்காலத்தில் பல ஆட்டங்கள் ஆடினதாகவும் உம்முடைய மனோபீஷ்டம் நிறைவேறுமளவும் விடாது தொடர்ந்ததாகவும் நான் கேள்விப் பட்டிருக்கிறேன்.

அழ. அது. வாஸ்தவம்தான், ஒப்புக் கொள்ளுகிறேன், ஆயினும், நான் காமுகனாயிருந்தேனேயொழிய, இவனைப்போல் இவ்வ ளவு தூரமா போனேன் ?

கா. அவர் என்ன செய்வார் பாபம் ! அவர் ஒரு அழகிய பெண் மணியை அகஸ்மாத்தாய் சந்திக்கிறார், அப்பெண்மணி இவர் மீது இச்சைப்படுகிறாள்—மாதர்களுடைய மனதைக் கவரும் படியான குணம், தன் தகப்பனாராகிய உங்களிடமிருந்து பெற் றார் போலும்—அவள் மீது இவர்காதல் கொள்கிறார்—அடிக் கடி அவளைப்போய்ப் பார்க்கிறார்—அவளுடன் பேசுகிறார்— பெருமூச்சுவிடுகிறார்—தன் காதலைத் தெரிவிக்கின்றார்—அவள் இவரது வேண்டுகோளுக் கிணங்குகிறாள்—இருவரும் ஒன்றா யிருக்கும் பொழுது, அவரது பந்துக்கள் கண்டுபிடித்து விடு கின்றனர்—அவர்கள் பலாத்காரமாய் இவரைக் கலியாணம் செய்துகொள்ளும்படி நிர்ப்பந்திக்கின்றனர்.

சே. (ஒருபுறமாக) என்ன நய வஞ்சகன் !

கா. அவரை அவர்கள் கொன்றிருந்தால் உமக்குத் திர்ப்தியாயிருக்குமா ? கட்டையேறுவதை விட கலியாணம் செய்து கொள்வது மேலல்லவா ?

அழ. இப்படி நடந்ததென்று எனக்குத் தெரிவிக்கவில்லையே ?

கா. சரி, அவரைக் கேட்டுப்பாருங்கள், அல்லவென்று கூறமாட்டார்.

அழ. பலாத்காரமாகவா அவனுக்குக் கலியாணம் செய்து வைத்தார்கள் ?

சே. ஆமாம் ஐயா.

கா. நான்பொய் பேசுவேனென்று எண்ணுகிறீர் !

அழ. அப்படியாயின் அவன் உடனேபோய், ஒரு நியாயாதிபதியிடம் இம்மாதிரியாகப் பலாத்காரமாய் கலியாணம் செய்விக்கப் பட்டதைப்பற்றி ஆட்சேபித்திருக்க வேண்டும்.

கா. அவர் அவ்வாறு செய்யமாட்டார்.

அழ. அப்படிச் செய்திருப்பானாயின், அதை ரத்துசெய்வது எனக்கு சுலபமாயிருந்திருக்கும்.

கா. கலியாணத்தை ரத்துசெய்வதா ?

அழ. ஆம்.

கா. நீர் அவ்வாறு செய்யமாட்டீர்.

அழ. நான் செய்யமாட்டேனா ?

கா மாட்டீர்.

அழ. ஏன் ? ஒரு தகப்பனுருக்குரிய சுதந்தரம் என் பட்சமில்லையா ? அன்றியும், இன்னொரு நியாயமாக, என் பிள்ளையை பலாத்காரம் செய்ததொன்றில்லையா ?

கா. அதற்கவர் ஒப்புக் கொள்ளார்.

அழ. அதற்கவன் ஒப்பமாட்டானா ?

கா. மாட்டார்.

அழ. என்பிள்ளை ?

கா. ஆம் உமதுபிள்ளை, தான் பயங்காளியென்றும், பலாத்காரத்தினால் இவைகளையெல்லாம் அவர் செய்யும்படி நேர்ந்ததென்றும், அவர் பயிங்கரமாய் நியாயஸ் தலத்தில் ஒப்புக் கொள்வது உமக்கு திர்ப்தியாயிருக்குமா ? அதை ஒப்புக்கொள்ளாதிருக்கும் வண்ணம் எப்படியும் பார்த்துக்கொள்வார். அப்படிக்குச் செய்வாராயின், தன்னைத்தானே இழித்துக் கொள்பவர் ஆவார், அன்றியும், உம்மைப் போன்ற தந்தையின் பெயரையும் பழித்தவர் ஆவர்.

அழ. அதை எல்லாம் ஒரு பொருட்டாக பாவியேன்.

கா. அவருடைய கௌரவத்திற்கும், உம்முடைய கௌரவத்திற்கும், உலகத் தோர்க்கெல்லாம் அவர் தானும் சுயேச்சையாய் இந்த மணம் புரிந்ததாகச் சொல்லவேண்டியது அவசியமல்லவா ?

அழ. சரி, என்னுடைய மானத்திற்காகவும், அவனுடைய மானத்திற்காகவும், அப்படியல்ல வென்று அவன் கூறவிரும்புகிறேன்.

கா இல்லை, அவர் ஒருகாலும் அப்படிச்செய்யார் எனநம்புகிறேன்.

அழ. அவன் அப்படிச் சீக்கிரம் செய்யும்படி பல வந்திக்கிறேன்.

கா. அப்படிச் செய்யமாட்டார் அன்று நான் உமக்குச் சொல்கிறேன்.

அழ. அப்படித்தான் அவன் செய்ய வேண்டும், இல்லாவிட்டால் என் சொத்தில் அவனுக் கொருகாசும் கொடுக்கப்போகிறதில்லை.

கா. நீங்களா ?

அழ. ஆம், நான் தான்.

கா. சந்தோஷம்.

அழ. சந்தோஷமா, ஏன் ?

கா. அவரை அவ்வாறு பராதீனம் செய்யமாட்டீர்.

அழ. நான் அவனைப் பராதீனம் செய்யமாட்டேனு ?

கா. செய்ய மாட்டீர்.

அழ. செய்யமாட்டேனு ?

கா. செய்யமாட்டீர்.

அழ. பார்ப்போம் ! இதென்ன பரிகாசமா ? நான் என்னுடைய மகனைப் பராதீனம் செய்யமாட்டேன் !

கா. செய்யமாட்டீர்—நான் சொல்லுகிறேன் பாரும்.

அழ. யார் என்னைத் தடுக்கக் கூடும் ?

கா. நீங்களே !

அழ. நானே ?

கா. ஆம்—உமக்கு மனம் வராது.

அழ. எப்படியும் மனம் வரும் !

கா. நீர் பரிகாசம் செய்கிறீர்.

அழ. நான் பரிகாசம் செய்யவில்லை.

கா. தந்தைக்கு சுபாவமாயுள்ள பட்சம் தடுக்கும் உம்மை.

அழ. தடுக்காது.

கா. தடுக்கும்.

அழ. நான் கட்டாயமாய் அவனைப்பராதீனம் செய்கிறேன் பார்.

கா. நீர் வேடிக்கையாய்ப் பேசுகிறீர்.

அழ. நான் வாஸ்தவமாய்ப் பேசுகிறேன்.

கா. எங்கப்பாணை! சுபாவத்தில் நீர் மிகவும் பட்சமுடையவர் என்று எனக்குத்தெரியும்.

அழ. எனக்குப் பட்சமே கிடையாது. நான் விரும்பும் பொழுது மிகவும் கடின சித்தமுடையவனா யிருப்பேன். இந்தப் பேச்செல்லாம் இதனுடன் முடியட்டும், என் கோபத்தை அதிகரிக்கின்றது இது.(செல்வநேசனிடம்.)போடா கட்டைதடியா! போய் என்பிள்ளையாகிய அந்தத் திருட்டுப் பையனை அழைத்துவா; நான்போய் இதற்குள், கௌரிநாதரைச் சந்தித்து எனக்கு நேரிட்ட துர் அதிர்டஷ்த்தை அவருக்குத்தெரிவிக்க வேண்டும்.

கா. ஏதாவது விஷயத்தில் நான் உங்களுக்கு உதவிசெய்யக் கூடுமாயின், நீங்கள் எனக்குக் கட்டளை யிடலாம்.

அழ. அப்படிக் கூறுவதற்காக உனக்கு வந்தனம் செய்கிறேன்-ஹா! இவன் எனது ஏக புத்திரனாயிருக்க வேண்டுமா? தெய்வச் செயலாய் நான் இழந்தபெண், இப்பொழுது என்னுடன் இருக்கலாகாதா? என் ஆஸ்தியை யெல்லாம் அவளுக்குக் கொடுத்திருப்பேனே!—(போகிறான்.)

(மற்றிருவரும் நகைக்கின்றனர்.)

செ. நான் ஒப்புக்கொள்ள வேண்டியதுதான். நீ நிரம்ப கெட்டிக்காரன்; எல்லாம் சரியாகத்தான் நடந்தேறி வருகிறது.—ஆயினும், இதெல்லாம் இப்படி இருந்தபோதிலும், நம்முடைய ஜீவனத்திற்குப் பணம் அவசியமாக வேண்டுமே? நம்முடைய கடன்காரர்களெல்லாம் நான்கு புறமும் நம்மை நிர்ப்பந்திக்கின்றனரே!

கா. அதையெல்லாம் எனக்கு விட்டுவிடு. மந்திரம் பலித்து வருகிறது. முக்கியமாக வேண்டிய ஒரு ஆளைப் போல் ஒருவன் வேஷம் போடவேண்டியிருக்கிறது? அவன் நாம் நம்பத் தக்கவனாயிருக்கவேண்டும், அப்படிப் பட்டவனைக் கண்டு பிடிக்க என் மூளையை உருக்கிக் கொண்டிருக்கிறேன்!—இரு!—நீ கொஞ்சம் நிமிர்ந்து நில்—முண்டாசை இப்படி முறுக்கிக் கட்டிக்கொள்—ஒருகாலை இப்படிமுன்னால் எடுத்துவை.—கையை இடுப்பின் பேரில் இப்படி வைத்துக்கொள்.—

முறைத்துப்பார்—இப்படி கொஞ்சம்கம்பீரமாக நாடகமேடையில் நடப்பது போல் நட—ஆ! சரி—என்னேடுவா, உடுப்பை மாற்றி உன் முகத்தையும் மாற்ற எனக்குத்தெரியும்.

செ. என்னவேண்டு மென்ருலும் செய், நியாயாதி பதிக்கும் எனக்கும் மனஸ் தாப முண்டாகும் படி மாத்திரம் செய்யாதே!

கா. சீச்சீ! எல்லாக் கஷ்டங்களேயும் அண்ணன் தம்பிகளைப்போல் பாகித்துக் கொள்வோம்; மூன்று வருஷம் மண்ணுக்குப் போட்டாலும் நம்முடைய தைரியமானது மழுங்கிப் போமா என்ன? (போகிருர்கள்)

காட்சிமுடிகிறது.

---

# இரண்டாம் அங்கம்

கௌரி நாதரும் அழகானந்தரும் வருகிருர்கள்.

கௌ. ஆம், சந்தேகமில்லை, காற்று இப்படியே மாருதிருக்குமாயின், நம்முடைய நண்பர்கள் இன்று இங்கு வந்து சேர்வார்கள். தாரா நகரத்திலிருந்து வந்த ஒரு மாலுமி, என் சிநேகிதர் அங்கிருந்து புறப்படுந் தருவாயில், அவரைக் கண்டதாக உறுதியாகக் கூறினன். நாம் யோசித்திருக்கும் காரியத்திற்கு, இச்சமயம்என் பெண் இங்குவந்து சேர்வது அத்தனை உசிதமாயிராது. உம்முடைய குமாரனைப் பற்றி, நீர் இப்பொழுது என்னிடம் கூறியது, நாமிருவருமாகக் கலந்து தீர்மானித்திருந்த ஏற்பாடுகளை யெல்லாம் முற்றிலும் வியர்த்தமாக்கி விட்டது.

அழ. அதைப்பற்றி உமக்குக் கவலை வேண்டாம். எல்லா இடையூறுகளையும் நீக்கிவிடுவதற்கு நான் உத்திரவாதம்; இதோ அந்த வேலையாக உடனே புறப்படுகிறேன்.

கௌ. உம்! அழகாநந்தரே, நான் சொல்வதைச் சற்றுகேளும், நம்முடைய பிள்ளைகளை நாம் மிகவும் ஜாக்கிரதையாக வளர்த்து வர வேண்டி யிருக்கிறது.

அழ. சந்தேகமில்லை—எதைப்பற்றி இவ்வாறு கூறுகிறீர்?

கௌ. உம்—வாலிபர்கள் சரியாக நடந்துகொள்ளாததற்கு, அவர்கள் தகப்பன்மார் அவர்களைச் சரியாகக் கொண்டு வராதது தான் காரணம்.

அழ. அப்படித்தான் சில சமயங்களில் நேர்கிறது ; ஆயினும் இப்படி நீர் கூறுவதின் அர்த்தமென்ன ?

கேள. நான் கூறுவதின் அர்த்தமென்னவா ?

அழ. ஆம்.

கேள. தகப்பனுர் செய்ய வேண்டியபடி, உம்முடைய குமாரனை நீர் அடக்கி வந்திருப்பீராயின், உம்முடைய மகன் உம்மை இவ்வாறு மோசம் செய்திருக்க மாட்டான்.

அழ. அதுவா ? ஆமாம். நீர் உம்முடைய குமாரனை அடக்கி ஆண்டதுபோல் செய்திருக்க வேண்டுமென்கிறீர் வாஸ்தவத்தில் !

கேள. வாஸ்தவமாய். எனக்கு இம்மாதிரியாக அவன் ஏதாவது செய்திருந்தால் நான் மிகவும் வருத்தப் பட்டிருப்பேன்.

அழ. உம், தகப்பனுர் செய்யவேண்டியபடி, நீர்மிகவும் நன்ருய் அடக்கி ஆண்ட உமது குமாரன், என் குமாரன் செய்ததை விட, இன்னும் கேடான காரியத்தைச செய்திருந்தாலோ ?—உம்—

கேள. என்ன !

அழ. என்னது என்ன ?

கேள. நீர் சொல்வது எனக்கு அர்த்தமாகவில்லை.

அழ. கௌரிநாதரே, மற்றவர்கள் நடவடிக்கையைக் கண்டிப்பதில் நீர் அவ்வளவு துரிதப்பட்டது அழகல்ல ; மற்றவர்களுடைய சிறுகுற்றங்களை எடுத்துக் காட்டுமுன், தங்களிடமுள்ள பெருங் குற்றங்களைக் களைய முயலவேண்டும்.

கேள. இதென்ன குதிர் போடுகிறீர் ?

அழ. சீக்கிரம் இதன் விவரத்தை அறிவீர்.

கேள. என்னுடைய மகனைப்பற்றிஏதாவது கேள்விப்பட்டீரா என்ன?

அழ. இருக்கலாம்.

கேள. என்ன அது ?

அழ. உம்முடைய ஆள் காளப்பன், நான் இருந்த கஷ்டதிசையைக் கண்டு, மொத்தமாகப் பொதுவில் அதைப்பற்றி என்னிடம் கூறினன்; மற்ற விவரங்களையெல்லாம், அவனிடமிருந்தாவது, மற்றவர்களிடமிருந்தாவது, சீக்கிரம் கேட்டறிவீர். நான் உடனே ஒரு வக்கீலிடம் போக வேண்டியயிருக்கிறது, நான் செய்ய வேண்டியதின்னவென்று, வக்கீலைக் கேட்கவேண்டியதிருக்கிறது.—நான் வருகிறேன். (போகிறார்.)

கேள. என்ன அர்த்தம் இதற்கெல்லாம் ?—அவர் பிள்ளை செய்ததை விட கேடான காரியம்!—அதை விட கேடானது என்ன இருக்கக் கூடுமென்று நான் நினைக்க முடியவில்லை. என் கோட்பாட்டின் பிரகாரம், ஒருவன் தன் தகப்பனுருடைய அனுமதியின்றி கலியாணம் செய்துக் கொள்வது, எல்லாக் கெட்ட காரியங்களிலும் மிகவும் கேடானதாம்.-ஆ! இதோ வருகிருன் என் குமாரன்.

லீலாநாதன் வருகிருன்.

லீ. ஆ! தந்தையே—நீர் திரும்பிவந்தது மிகவும் சந்தோஷம். (அவரை ஆலிங்கனம் செய்துகொள்ள விரைகிருன்.)

கேள. (அதைத்தடுத்து) கொஞ்சம் பொறு—இந்த விஷயத்தைப் பற்றி முன்பு பேசி முடிப்போம்.

லீ. அப்பா! உங்களை நான் ஆலிங்கனம் செய்து கொண்டபிறகு—

கேள. (அதைத்தடுத்து) கொஞ்சம் பொறு!—முன்பு நான் சொல்வதைக்கேள்.

லீ. என்ன அப்பா? நீர் சுகமாய்த் திரும்பி வந்ததற்காக என் சந்தோஷத்தை நான் தெரிவிக்கலாகாதா ?

கேள. ஆம், அதற்கு முன் நாமிருவரும் ஒரு வியவஹாரம் பேச வேண்டியிருக்கிறது.

லீ. என்ன அது ?.

கேள. நிமிர்ந்து நில்; உன் முகத்தை நான் நேராகப் பார்க்கட்டும்.

லீ. ஏன் ?

கேள. என்னை நேராகப்பார்.

லீ. அப்படியே.

கேள. இப்பொழுது சொல்—என்ன நடந்தது ?

லீ. என்ன நடந்ததா ?

கேள. ஆம், நான் வெளியூருக்குப் போயிருந்த பொழுது, என்ன செய்தாய் நீ ?

லீ. நான் என்ன செய்திருக்க வேண்டும் என்கிறீர் ?

கேள. நீ என்ன செய்திருக்க வேண்டு மென்பதைப்பற்றி நான் கேட்கவில்லை—நான் கேட்பது—நீ என்ன செய்தாய் என்று.

லீ. உமக்குக் கோபம் விளைக்கும் படியான ஒன்றையும் நான் செய்யவில்லை.

கேள. ஒன்றும் செய்யவில்லையா ?

லீ. இல்லை.

கேள. உனக்கு நிரம்பதைரியமிருக்கிறது !

லீ. என்மீது ஒரு குற்றமு மில்லாத படியால்.

கேள. உம்—காளப்பன் உன்சமாசாரமெல்லாம் தெரிவித்திருக்கிறுன்.

லீ. காளப்பஞ ?

கேள. ஆஹா !—இப்பொழுது தெரிகிறதா ?

லீ. அவன் என்னைப் பற்றிய சமாச்சாரம் உமக்குத் தெரிவித்திருக் கிருஞ ?

கேள. அதைப் பற்றி நான் தீரவிசாரிப்பதற்கு இது சரியான இட மல்ல ; வேறு இடத்தில் இதைப் பற்றி ஆராயவேண்டும். நீ வீட்டிற்குப்போ. நான் சீக்கிரம் வருகிறேன் அங்கு. ஆ ! போக்கிரிப்பயலே ! எனக்கு மாத்திரம் நீ அவமானம் கொண்டு வந்திருந்தால், என் பிள்ளை யென்றும் பாராமல், உன்னை என் வீட்டை விட்டு துரத்தி விடுகிறேன். என் முகத்தில் மறுபடி யும் விழிக்காதபடி செய்கிறேன் ! (போகிருர்.)

அஸ்வதேவனும், காளப்பனும் ஒரு புறமாக வருகிருர்கள்.

லீ. (ஒருபுறமாக)—என்னை இப்படி மோசம் செய்வதா ? திருட்டுக் கழுதை ! நான் அவனுக்குக் கூறிய ரகசியத்தை மிகவும் ஜாக்கி ரதையாகப் பாது காப்பதை விட்டு, என் தகப்பஞர் வந்ததும் அவரிடம் இதைத் தெரிவித்து விடுகிறுஞ ? ஆகட்டும் ! எங் கப்பானை இந்த நம்பிக்கைத் துரோகத்திற்காக அவனைத் தக்க படி கண்டிக்கிறேன்.

அ. என் பிரிய நண்பனே, காளப்பா, உனக்கு நான் என்ன கைம் மாறு செய்யப்போகிறேன் ! உன்னை நான் என்னென்று புகழ் வது ! எனக்குதவியாக உன்னை எனக்களித்தற்காக ஈசனுக்கு நான் வந்தனம் செய்யவேண்டும்.

லீ. ஆ ஹா ! வந்தாயடா அப்பா ! இன்று உன்னைப் பார்த்தது மிகவும் சந்தோஷம் !—திருட்டுப்பயலே !

கா. உங்கள் அடிமை !—நீங்கள் அப்படிச் சொல்லக் கூடாது !

லீ. (தன் கத்தியை உருவி) துரோகி ! நிரம்ப அழகாய் வேலை செய் திருக்கிறுய் !—உன்னைத் தக்கபடி தண்டிக்கவேண்டும்.—

கா. எஜமான் ! (முழுந்தா ளிடுகிறுன்)

அ. (லீலாநாதன் காளப்பனை அடிக்காதபடி, அவர்களுக் கிடையில் நின்று லீலாநாதனை தடுத்து) ஆ ! லீலாநாதா !

லீ. ஒதுங்கு அஸ்வதேவா ! என்னைத் தடுக்காதே !

கா. ஐயோ ! எஜமானே !

அ. (லீலாநாதன் கைகளைப் பிடித்துக்கொண்டு) கொஞ்சம் தயவுசெய்.

லீ. என்னைக் கொஞ்சம் பழிதீர்த்துக் கொள்ளவிடு.

அ. லீலாநாதா, உன் நண்பனாகிய நான் வேண்டுகிறேன் உன்னை ! அவனை ஒன்றும் செய்யாதே.

கா. எஜமான்! நான் உங்களுக் என்ன கெடுதி செய்தேன்?

லீ. பாதகா ! எனக்கு என்ன கெடுதி செய்தாயா ?

[அவனை அடிக்கப் போகிறான்)

அ. (அவனைத் தடுத்து) மெல்ல ! மெல்ல !

லீ. என்னை விடு அஸ்வதேவா !—இந்தப் பாதகன் எனக்குச் செய்த துரோகத்தை அவன் வாயினின்றும் வரவழைக்கிறேன் இந்த க்ஷணம் !—திருட்டுப் பயலே! நீ எனக்குச் செய்த மோசத்தை அறிவேன் நான் : இப்பொழுது தான் அறிந்தேன் அதை. இந்த ரகசியம் எனக்குத் தெரியாதென்று நினைத்தாய் போலும் ! உன் வாயால் நீயே ஒப்புக் கொள்ளும்படிச் செய்கிறேன்—இல்லாவிட்டால்—இந்தக் கத்தியால் ஒரே வெட்டாய் வெட்டி விடுகிறேன்.

கா. ஐயோ ! எஜமானே ! உங்களுக்கு அப்படிச் செய்ய மனம் துணியுமா !

லீ. வா—உடனே உண்மையைக் கூறு.

கா. நான் உங்களுக்கு—துரோகமா—செய்தேன் ?

லீ. ஆம் பாதகா ! உன்மனதுக்குத் தெரியும் அது இன்னதென்று நன்றாய்.

கா. நான் பிரமாணமாகச் சொல்கிறேன்—நான் ஒன்றும் செய்யவில்லையே !

லீ. (மறுபடியும் அவனை அடிக்கப் பிரயத்னப்பட்டு) ஒன்றும் செய்யவில்லையா ?

அ. (லீலாநாதனைத் தடுத்து) லீலாநாதா !

கா. ஆனால்—எஜமானே, எப்படியும் நீங்கள் அறிய விரும்புவதினால், சில நாட்களுக்கு முன் உமக்குப் பரிசாக அனுப்பிய பாண்டேசத்து மதுவை, என்னுடைய சிநேகிதர்களும் நானுமாகக் குடித்து விட்டோம், என்று ஒப்புக் கொள்ளுகிறேன் ; அந்த பீப்பாயில் ஒரு ஓட்டை செய்து, அதிலிருந்த மதுவெல்லாம் தரையில் ஓடி விட்டது என்று நீர் எண்ணும்படியாக, சுற்றிலும் தண்ணீரை இறைத்து வைத்தேன்.

வீ. ஆ, ஹா! திருட்டுக் கழுதை! பாண நகரத்திலிருந்து வந்த மதுவை யெல்லாம் குடித்தவன் நீதானா? பாபம்! அந்த வேலைக்காரி உன்னை மோசம் செய்தாள் என்று அவளை வீணில் கோபித்துக் கொண்டேன்.

கா. ஆம் எஜமானே! அதற்காக என்னை மன்னிக்கும்படி கேட்டுக் கொள்ளுகிறேன்.

வீ. இதை நான் அறிந்தது சந்தோஷமாச்சுது. ஆயினும், இப்பொழுது நான் பேச வந்தது அதைப் பற்றி அல்ல.

கா. அதைப்பற்றி யல்லவா எஜமானே?

வீ. அல்ல, அதை விட எனக்கு மிகவும் முக்கியமான சமாசாரம், அதைப்பற்றி எனக்கு நீ சொல்லித்தான் தீரவேண்டும்.

கா. வேறொன்றும் நான் தப்பிதம் செய்ததாக எனக்கு ஞாபகமில்லை எஜமானே!

வீ. [அவனை அடிக்கமுயன்று) சொல்ல மாட்டாயா?

கா. ஐயோ!—

அ. மெல்ல, மெல்ல, (அவனைத் தடுத்து)

கா. ஆம், எஜமானே, இப்பொழுது ஞாபகம் வருகிறது. உண்மையைக் கூறுகிறேன்; மூன்று வாரங்களுக்கு முன்பாக, நீர் காதல் கொண்டிருக்கும், குறக் குலத்தில் வாழும் பெண்மணியிடம், ஒரு நாள் சாயங்காலம், அவளுக்குக் கொடுக்க ஒரு சிறிய கடியாரத்தை அனுப்பினீரே; நான் திரும்பி உம்முடைய வீட்டிற்கு உடம் பெல்லாம் புழுதி படிந்தவனும், முகமெல்லாம் இரத்தம் படிந்தவனும் வந்து, என்னைத் திருடர்கள் வழி மறித்து அடித்து அந்தகடியாரத்தைக் களவுசெய்து கொண்டு போய் விட்டார்களென்று கூறினே னல்லவா?—அப்படி நடக்கவில்லை, அந்த கடியாரத்தை நானே திருடி வைத்துக் கொண்டேன் எஜமானே!

வீ. நீயா என்கடியாரத்தைத் திருடினவன்?

கா. ஆம் எஜமானே, மணிஎன்னஎன்று பார்ப்பதற்காக, வைத்துக் கொண்டேன்.

வீ. ஆ ஹா! நல்ல நல்ல சமாசாரங்களெல்லாம் எனக்குத் தெரிகிறது! நிரம்ப யோக்கியமான மனிதனைத்தான் என் வேலையாளாகவைத்துக் கொண்டிருக்கிறேன். ஆயினும் இப்பொழுது என் மனதைக் கஷ்டப் படுத்துவது அதல்ல.

கா. அதல்லவா ?

ஸ்ரீ. இல்லே பாதகா! இதை யன்றி வேறொரு விஷயத்தைப் பற்றி நீ செய்த தப்பிதத்தை ஒப்புக் கொள்ள வேண்டியிருக்கிறது.

கா. இதென்ன கஷ்டகாலமாயிருக்கிறது! (தலையைச் சொரிகிறான்.)

ஸ்ரீ. சீக்கிரம் சொல். எனக்கு அவசரமாய் இருக்கிறது.

கா. அவ்வளவுதான் நான் செய்தது எஜமானே.

ஸ்ரீ. (அவனே அடிக்க யத்னித்து) அவ்வளவு தானு ?

அ. (அவனேத்தடுத்து) ஆ !

கா. ஒ ! ஆமாம் எஜமானே !—ஆறுமாசத்திற்கு முன்பாக, ஒரு நாள் இரவு, ஒரு தடியினுல் உம்மை நன்ருய்ப் புடைத்ததே ஒரு பிசாசு, ஞாபகமிருக்கிறதா ? நீர் ஓடினபொழுது நில அறைக்குள் வீழ்ந்து, உம்முடைய கழுத்து முறிந்திருக்கும் என்று பயந்தீரே ?

ஸ்ரீ. ஆம், அதைப்பற்றி என்ன ?

கா. நான் தான்—எஜமானே !—அந்த பிசாசாய் வந்தது.

ஸ்ரீ. துரோகி! நீயா அந்த பிசாசாக நடித்தது ?

கா. ஆம். எஜமானே ! அப்படிச் செய்தால் நீர் பயந்து தினம்ராத்திரியில், எங்கள் மீது கட்டுக் காவலாயிருக்க விரும்பமாட்டீர், என்று அப்படிச் செய்தேன். வேறொன்று மில்லே.

ஸ்ரீ. வேறொருசமயத்தில், வேறொரு இடத்தில், இப்பொழுது நான் அறிந்ததையெல்லாம் கவனிக்கிறேன்—அதிருக்கட்டும், இப்பொழுது நான் எடுத்த சமாசாரத்துக்குவருகிறேன்—என்தகப்பனுரிடம் நீசொன்னதை எல்லாம் ஒப்புக்கொள்ள வேண்டும்.

கா. உங்கள் தகப்பனுரிடமா ?

ஸ்ரீ. ஆமாம் திருட்டுப் பயலே !—என் தகப்பனுரிடம்.

கா. அவர் திரும்பி வந்த பிறகு அவரை நான் பார்க்கவு மில்லேயே.

ஸ்ரீ. அவரைப் பார்க்கவுமில்லேயா ?

கா. இல்லே எஜமானே.

ஸ்ரீ. வாஸ்தவமாய் ?

கா. வாஸ்தவமாக, அவரையே கேட்டுப் பாருங்கள்.

ஸ்ரீ. என்ன ஆச்சரியம் ! அவர் வாயினின்றும் இதை நான் கேட்டேனே !

கா. அப்படியாயின்—நீங்கள் என்னே மன்னிக்கவேண்டும்—அவர் உண்மையைப் பேசவில்லே.

*கோளன் வருகிறான்*

கோ. ஐயா, நீங்கள் கலியாணம் செய்து கொள்ளவிரும்பும் பெண் மணியைப்பற்றி துக்க கரமானசமாசாரம் கொண்டுவந்திருக் கிறேன்.

வீ. என்ன அது?

கோ. உம்முடைய ஜ்வாலகிசோரியை, அந்தக் குறவர்கள் தங்களுடன் அழைத்துக்கொண்டுபோய் விடப்போகிறார்களாம். உடனே, அப்பெண்மணி என்னை அழைத்து, கண்களில் நீர்ததும்ப உம் மிடம் உடனே போய், இன்னும் இரண்டுமணி நேரத்திற்குள் ளாக, தன்னை உம்மிடம் ஒப்புவிப்பதற்காக அவர்கள் கேட்ட பணத்தை, நீர் அவர்களுக்கு கொடுக்காவிட்டால், அவளை நீர் மறுபடியும் காணாதபடி இழந்து விடுவீர், என்று சொல்லும் படி வேண்டிக் கொண்டார்கள்.

வீ. இரண்டுமணி நேரத்திற் குள்ளாகவா?

கோ. ஆம் இரண்டு மணிக்குள். (போகிறான்.)

வீ. ஹா!—காளப்பா! நீ நல்லவனுச்சே! நீதான் எனக்கு உதவி செய்யவேண்டும்.

கா. (கர்வத்துடன் அவன் எதிரில் நடந்து) ஹா! இப்பொழுது நான் நல்ல காளப்பன்!—உமக்குத் தேவையாயிருக்கும் பொழுது, நான் "நல்ல காளப்பன்"!

வீ. இதோபார்! சற்று முன்பாக நீ செய்ததாக ஒப்புக்கொண்ட தப்பிதங்களை யெல்லாம் மன்னித்துவிட்டேன்!—அவைகளை விட இன்னும் கேடானது ஏதாவது செய்திருந்தாலும் மன் னித்து விட்டேன்.

கா. வேண்டாம்! வேண்டாம்! நான் செய்ததொன்றையும் மன் னிக்க வேண்டாம். உம்முடைய கத்தியினால் குத்தி என்னைக் கொன்றுவிடும். உம்மால் கொல்லப்பட்டால் நான் சந்தோஷ மாய்ச் சாவேன்.

வீ. அப்படியல்ல, நீ எனக்கு உதவிபுரிந்து, எனக்கு உயிரைக் கொடுக்கும் படியாக உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன்.

கா. இல்லை இல்லை! நீங்கள் என்னைக் கொன்று விட்டால்தான் நல்லது.

வீ. உன் உயிரானது எனக்கு மிகவும் விலையிலாததாம்! என் பொருட்டு உன் புகழத்தக்க புத்தியை உபயோகிக்கும்படி

வேண்டுகிறேன் உன்னை. எந்தக் கஷ்டத்தையும் உன்னால் தான் சாதிக்க முடியும்.

கா. வேண்டாம், என்னைக் கொன்று விடுங்கள்—உங்களை வேண்டுகிறேன்.

வீ. ஹா! என்மீது கொஞ்சம் தயைபுரிந்து, அதையெல்லாம் பற்றி இனி யோசியாதே. நான் வேண்டுகிற இந்த உதவியைச் செய்யும் வழியைப்பார்.

அ. காளப்பா, அவருக்காக நீ ஏதாவது செய்துதான் ஆக வேண்டும்.

கா. இவ்வாறு நான் அவமானப்பட்ட பிறகு, எப்படி செய்யக் கூடும்?

வீ. நான் கோபித்ததை யெல்லாம் மன்னித்து, உன் புத்தியைக் கொண்டு எனக்கு உதவிபுரி.

அ. நானும் அவரோடு சேர்ந்து உன்னை வேண்டுகிறேன்.

கா. இந்த அவமானமானது என் மனதை அரிக்கின்றது.

அ. உன் கோபத்தைக் கொஞ்சம் தணித்துக் கொள்.

வீ. காளப்பா, என் கலியாண விஷயத்தில் நான் இவ்வளவு கஷ்ட திசையில் இருப்பதைக் கண்டு, நீ என்னைக் கைவிடலாமா?

கா. நேராக என் முகத்திற் கெதிரில், என்னை இப்படி நீர் அவமானம் செய்வதா?

வீ. நான் செய்தது தவறுதான்; ஒப்புக் கொள்ளுகிறேன்.

கா. என்னை, ஒரு திருட்டுப் பயல்! முடிச்சுமாறி! ஜெயிலுக்குப் போனவன், பாதகனைப் போல, எண்ணிப்பேசுவதா?

வீ. அப்படிச் செய்ததற்காக நான் மிகவும் துக்கப்படுகிறேன்.

கா. உமது கத்தியை என்உடலில் ஊடுருவிச் செலுத்தப் பார்ப்பதா!

வீ. என் முழுமனதுடன், என்னை நீ மன்னிக்க வேண்டுமென்று வேண்டிக்கொள்ளுகிறேன். அன்றியும் நான் உனக்கு முழந்தாளிடவேண்டுமென்று விருப்பமிருந்தால், காளப்பா, இதோ அப்படியே செய்கிறேன் (முழந்தாளிட்டு) என்னை இச்சமயம் கைவிட வேண்டாமென்று இரந்து வேண்டுகிறேன்.

அ. ஆ! காளப்பா! இனிமேல் நீ இசைய வேண்டியது தான்.

கா. எழுந்திரும்—இன்னொருதரம் இம்மாதிரியாக அவசரப்பட்டுப் பேசிவிடாதீர்.

வீ. நீ எனக் குதவுவதாக வாக்களிக்கிறாயா?

கா. அதைப் பற்றியோசிக்கிறேன்.

லீ. ஆயினும், நமக்குக் காலம் அதிகமில்லை யென்பதை அறிவாய்.

கா. அதைப் பற்றி உமக்குக் கவலைவேண்டாம். உமக்கு எவ்வளவு வேண்டும் ?

லீ. ஐந்நூறுபொன்.

கா. உமக்கு ?

அ. இருநூறு பொன்.

கா. உங்கள் தகப்பன்மார் களிடமிருந்து இப்பணத்தை நான் வரவழைக்கிறேன்—உங்கள் தகப்பனார் விஷயத்தைப் பற்றி முன்பே எல்லாம் ஏற்பாடாய்விட்டது.—உம்முடைய தகப்பனாரைப் பற்றி, அவர் முதல் தரமான லோபியாயிருந்த போதிலும், அவ்வளவு கஷ்டமிராது ; ஏனெனில் ஸ்வாமியின் கிருபையால், அவருக்கு மூளை அதிகமாயில்லை யென்பது, நீர் முற்றிலும் அறிந்த விஷயமே. மற்றவர்கள், அவர் எப்படி நம்ப வேண்டுமென்று விரும்பினார்களோ, அப்படியே நம்புவார் என்பதற் கையமில்லை. நான் அவரைப்பற்றிச் சொல்வது உமக்குக் கோபம் விளக்கலாகாது; உங்களுக்கும் அவருக்கும் புத்திவிஷயத்தில் யாதொரு ஒற்றுமையு மில்லை.

லீ. மெல்ல, காளப்பா.

கா. ஆயினும்—இதோ வருகிறார் அஸ்வதேவருடைய தகப்பனார். அவரிடம் நமது வேலையை முன்பு ஆரம்பிப்போம், அவர் முதலில் வருகிறபடியால் நீங்கள் இரண்டு பெயரும் போய் விடுங்கள்.—நீர் செல்வநேசனிடம் அவன் நடக்கவேண்டியதைச்செய்ய, சீக்கிரம் வரச் சொல்லுங்கள்.

(அஸ்வதேவரும், லீலாநாதரும் விரைந்து போகின்றனர்.)

அழகாநந்தர் வருகிறார்.

கா. தனக்குள் பேசிக்கொள்ளுகிறார்.

அழ. தகப்பனாயிற்றே என்று எனக்காக கொஞ்சமாவது பார்க்க வேண்டாமா ? கொஞ்சமாவது மரியாதை இருக்கவேண்டாமா? இப்படி இழிந்த குலத்திலுதித்த ஒரு பெண்ணைக் கலியாணம் செய்து கொள்வதாவது!—ஆ! இந்த யௌவனத்தின் கொழுப்பிருக்கிறதே !—

கா. ஐயா, உங்கள் ஊழியன்,

அழ. வா அப்பா, காளப்பா.

கா. உம்முடைய குமாரன விஷயத்தைப்பற்றி யோசிக்கிறீர் போலும்.

அழ. ஆம், அது எனக்கு அடங்காக் கோபத்தை விளைத்திருக்கிறது.

கா. பாருங்கள், இந்த உலக வாழ்க்கையென்பது மிகவும் விசித்திரமானது. எந்த க்ஷணம் என்ன நேரிடுமோவென்று எதற்கும் சித்தமாயிருப்பதே மிகவும் உசிதமாகும்; அநேக வருஷங்களுக்கு முன் ஒரு பெரியவருடைய உபதேசத்தைப் பற்றி கேள்விப்பட்டேன், அதை எப்பொழுதும் என் ஞாபகத்தில் வைத்திருப்பது நான்.

அழ. என்ன அது?

கா. அவர் சொன்னதென்னவென்றால், ஒரு குடும்பஸ்தன், கொஞ்சகாலம் கழித்துத் தன் வீட்டுக்குப் போவதானால், அவன் திரும்பிப் போனவுடன், அங்கு நேரிட்டதென அவனுக்குத் தெரிவிக்கக் கூடிய எல்லாதுர் அதிர்ஷ்டங்களைப் பற்றியும் அவன் மனதில் யோசித்துக் கொண்டே போகவேண்டும், என்பதாம்; அவன், தன்வீடுதீப்பற்றி எறிந்து போய் விட்டது, தன் பணத்தை திருடர்கள் திருடிக் கொண்டு போய் விட்டார்கள்; தன் பெண்ஜாதி இறந்து போனாள், தன்மகன்கைகாலறுப்புண்டான், தன் பெண் வீட்டைவிட்டு ஓடிப்போய்விட்டாள், என்று இப்படிப்பட்ட விஷயங்களெல்லாம் தனக்கு நேரிட்டதாக நினைத்துக் கொள்ளவேண்டும்; பிறகு எது எது நடக்க வில்லையோ, அவைகள் நடவாததற்காக தன் அதிர்ஷ்டம் என்று சந்தோஷப்படவேண்டும் என்பதாம். என் சொந்த வாழ்க்கையில் இந்த புத்திமதியை நான் அனுசரித்து வந்திருக்கிறேன். நான் எனது எஜமானர் வீட்டிற்குத் திரும்பிப் போகும் பொழுதெல்லாம், அவர்கள் என்னை கோபித்துக் கொள்வார்கள், திட்டுவார்கள், செருப்பால் அடிப்பார்கள், உதைப்பார்கள் என்று என்மனதை சித்தப் படுத்திக் கொள்வேன்; இதிலேதாவது குறைவுபட்டாலோ, என்பாக்கியம் என்று சந்தோஷப்படுவேன்.

அழ. அதெல்லாம் சரிதான்—ஆயினும் இந்த இழிகுலத்திற் பிறந்த பெண்ணை என்மகன் கலியாணம் செய்து கொண்டதை, என்னால் பொறுக்கமுடியவில்லை. நான் அவனுக்காகத் தீர்மானித்து வைத்திருந்த விவாஹம் இதனால் தடை பெறுகிறது. ஆகவே

சிலவக்கீல்களிடம் போய் அதை ரத்துசெய்ய ஏற்பாடு செய்திருக்கிறேன்.

கா. ஐயோ ! நான்சொல்வதை நம்புங்கள் ஐயா, இந்த வியவஹாரத்தை வேறெந்த விதத்திலாவது முடிவுக்குக் கொண்டு வருவது நலமெனத் தோன்றுகிறது. இந்த தேசத்தில் கோர்ட்டு வியவஹாரம் என்றால் எப்படிப்பட்டதென்று உமக்கு நன்றாய்த் தெரியும் ; அநேகம் கஷ்டங்களுக்கு உள்ளாக்கப்படுவீர் பிறகு.

அழ. நீசொல்வது சரிதான், நானும் அப்படித்தான் நம்புகிறேன், ஆயினும் வேறு என்ன வழியிருக்கிறது ?

கா. நான் ஒருவழி கண்டு பிடித்திருக்கிறேன் என்று நினைக்கிறேன். இந்த மனக்கவலையினின்றும் உம்மைத் தப்புவதற்கு, எப்படியாவது ஒருவழி கண்டு பிடிக்க வேண்டுமென்று முயன்றேன், உம்முடைய கஷ்டத்தைப் பார்த்து பரிதாபப்பட்டவனாய். உத்தமரான தகப்பன்மார்கள் அவர்களது பிள்ளைகளைப்பற்றி துக்கப்படுவதைக் கண்டால், என்மனமானது மிகவும் சஞ்சலத்தையடைகிறது ; அதுவும் உங்கள் விஷயத்தில் எனக்கு மிகவும் கௌரவம் உண்டு.

அழ. மிகவும் சந்தோஷம்.

கா. ஆகவே, உம்முடைய மகன் விவாகஞ்செய்து கொண்ட அப்பெண்ணின் சகோதரனைப் போய்ப் பார்த்தேன். அவனுக்கு வெட்டுவதும் கொல்லுவதும் தான் தொழில் ; எந்நேரமும் கையும் கத்தியுமாயிருப்பவன், பேச்செல்லாம் வெட்டும் குத்தும் தான் ! ஒருவனைக் கொல்வதென்றால், அவனுக்கு, காலையில் எழுந்ததும், காப்பிசாப்பிடுவதுபோல். அவனுடன் பேசி, மெல்ல இந்த கலியாண விஷயத்திற்குக் கொண்டு வந்து, அது பலாத்காரத்தின் பேரில் நடந்த படியால் எவ்வளவு எளிதில் இதை நீர் ரத்து செய்ய மார்க்கம் அகப்பட்டதென்று அவனுக்குக் காண்பித்து, தகப்பனாராகிய உமக்கு இதிலுள்ள சுதந்தரங்களை அவனுக்கு அறிவித்து, நியாயசட்டத்தின்படியும், உமது செல்வாக்கினாலும், உமது சிநேகிதர்கள் மூலமாயும், உமக்கு நியாயஸ்தலத்தில் கிடைக்கக் கூடிய ஒத்தாசைகளையெல்லாம், எடுத்துக் காட்டினேன். முடிவில் அவனை அப்படியே கவிழ்த்து விட்டேன், அதன் பேரில், ஏதோ ஒரு

தொகையைப் பெற்றுக் கொண்டு, இந்த வியவஹாரத்தைப் பைசல் பண்ணிவிட வேண்டுமென்று நான் சொன்னதற்கிசைந்தான்; நீர் அந்தத் தொகையை அவனுக்குக் கொடுப்பதானால் தான் இந்த கலியாணத்தை ரத்து செய்வதாக ஒப்புக்கொண்டான்.

அழ. என்ன கேட்டான் அவன் ?

கா. ஓ! அசாத்தியமான தொகையில் ஆரம்பித்தான்.

அழ. எவ்வளவு அது ?

கா. ஐந்நூறு அறுநூறு பொன்என்று ஆரம்பித்தான்.

அழ. அவனுக்கு ஐந்நூறு அறுநூறு தரம் வாந்தி பேதிவர ! நம்மை என்ன கேலி பண்ணுகிறுனு அவன் ?

கா. அப்படித்தான் நானும் கேட்டேன். அதெல்லாம் முடியவே முடியாதென்று ஒதுக்கிவிட்டேன். ஐந்நூறு அறுநூறு பொன் அவனுக்குக் கொடுக்க நீர் ஏமாந்த சோணகிரி அல்லவென்று அவனுக்கு ஸ்பஷ்டமாய்த் தெரிவித்தேன்; சுருக்கிச் சொல்லு மிடத்து, நெடுநேரம் எங்களுக்குள் நடந்த வாக்கு வாதத்தின் முடிவு இதாகும். "நான் ராணுவத்தைச்சேரவேண்டிய காலம் வந்து விட்டது. ஆகவே என் உடை முதலியவைகளுக் கெல்லாம் ஏற்பாடு செய்ய வேண்டி யிருக்கிறது. நீர் விரும்புகிறபடி செய்ய, எனக்கிஷ்ட மில்லாவிட்டாலும், எனக்குக் கொஞ்சம் பணம் அவசியமாய் வேண்டியிருக்கிற படியால், இதற்கு ஒப்புக்கொள்ள வேண்டியவனுயிருக்கிறேன். எனக்கு ஒரு குதிரை வேண்டி யிருக்கின்றது. ஒரு சுமாரான நல்ல குதிரை அறுபது பொன்னுக்குக் குறைந்து கிடைக்காதெனக்கு" என்று அவன் தெரிவித்தான்.

அழ உம்—சரி—அறுபது பொன் தொலைக்கிறேன்.

கா. "ஜீனி முதலிய குதிரையின் முஸ்தீபும், துப்பாக்கிகளும், வேண்டியிருக்கிறது. அவைகள் குறைந்த பட்சம் இருபது பொன்னுவதுபிடிக்கும்"

அழ. உம்—இருபதும் அறுபதும்—எண்பது பொன் ஆகிறது.

கா. சரியாக.

அழ. நிரம்ப அதிகம்—ஆயினும் ஒழியட்டும்—ஒப்புக் கொள்ளுகிறேன்.

கா. "என்னுடைய வேலைக்காரனுக்கும் ஒரு சின்ன மட்டமாவது வேண்டியிருக்கிறது, அது ஒரு முப்பது பொன்னுகும்."

அழ. அவன் பாழாய்ப் போக! அவன் காலால் நடந்து போகட்டும்! நான் ஒரு பைசாவும் கொடுக்க மாட்டேன்!

கா. ஐயா—

அழ. மாட்டேன்! அதனப்பிரசங்கிக் கழுதை!

கா. எஜமான் பின்னால் அவன் நடந்து போக முடியாது பாருங்கள்.

அழ. நடந்து போகா விட்டால் பறந்து போகட்டும்! வேலைக்காரக் கழுதைக்கு ஒரு குதிரை என்ன!—இல்லாவிட்டால், அவன் எஜமானும் அவனும் இரண்டு பெயரும், காலால் நடக்கட்டும்!

கா. ஐயோ ஸ்வாமி! ஐயா, அற்பத்துக்காக எல்லாவற்றையும் கெடுத்து விடாதீர். உம்மை வேண்டிக் கொள்ளுகிறேன். கோர்ட்டுக்கு மாத்திரம் போகாதீர், கோர்ட்டுக்குப் போய் சிக்கிக்கொள்வதைவிட, எதையும் கொடுத்துத் தொலையும்.

அழ. உம்—சரி—அப்படித் தானுகட்டும்—இந்த முப்பதுபொன்னையும் நான் தொலைக்க வேண்டியது தான்.

கா. "என் சாமான்களை யெல்லாம், தூக்கிக்கொண்டுவர—ஒரு பொதிமாடு—"

அழ. ஓ! அது வொன்று?—அதைவிட அவன் எருமைக்கடாவின் மீதேறிக் கொண்டு எமலோகம் போய்ச் சேரட்டும்!—இதெல்லாம் முடியவே முடியாது! நாம் கோர்ட்டுக்குப் போவோம்.

கா. ஐயா, கொஞ்சம் தயவு பண்ணுங்கள்—

அழ. மாட்டேன்! அதெல்லாம் ஒன்றும் முடியவே முடியாது.

கா. ஒரு சின்ன பொதி மாடு.

அழ. ஒரு சின்ன கழுதை குட்டிகூட கொடுக்க மாட்டேன் அவனுக்கு!

கா. கொஞ்சம் யோசித்துப் பாருங்கள்—

அழ. மாட்டேன். நான் கோர்ட்டுப் போகிறேன்

கா. ஐயோ! ஐயா, நீங்கள் என்ன இப்படி பேசுகிறீர்களே! இப்படி நீங்கள் தீர்மானம் பண்ணலாமா? கோர்ட்டுக்குப் போவதினால் என்னென்ன கஷ்டங்கள் இருக்கின்றன வென்று யோசித்துப் பாருங்கள். முதலில் நோடீசு கொடுக்கவேணும், அதற்கு சிலவு; பிறகு சம்மன் தாக்கல் பண்ணவேண்டும், அதற்கு சிலவு; பிறகு பிரதிவாதியிடம் சம்மனைச் சேர்க்கவேணும், அதற்கு சிலவு, இதற்காக பெய்லீப்புக்கு துட்டு, சாட்சி சம்மன் பண்ண வேண்டும், அதற்கு சிலவு, இதல்லாம் அல்லாமல், வக்கீலுக்கு

வியாஜ்யம் நடத்த பீசு, வக்கீல் குமாஸ்தாவுக்கு செலவு, வக்கீல் ஆபீசு பையனுக்கு பத்யம்; இந்த செலவெல்லாம் ஒரு புறம் இருக்கட்டும்; வியாஜ்யம் சீக்கிரம் தீர்மானமாகுமா என்ன? தற்காலம் கோர்ட்டுகளில் நடக்கிர மாமூல்பிரகாரம், எத்தனை வாய்தா விழும் என்று யோசித்துப் பாருங்கள், ஒவ்வொரு வாய்தாவுக்கும் கட்டைத் தூக்கிக்கொண்டு, வீட்டிலிருந்து வக்கீல் வீட்டிற்கும், அங்கிருந்து கோர்ட்டுக்கும், ஓடவேண்டியதுதான்! இதன்றியும் வாய்தாவுக்கு வாய்தா சாட்சிக்காரர்களைச் சரிப்படுத்தவேண்டும். "சாட்சிக் காரர் காலில் விழுவதைவிட கட்சிக்காரன் காலில் விழலாம்" என்னும் பழமொழியைத் தாங்கள் கேட்டிருப்பீர். இவ்வளவு தொல்லையும் கடந்து, தெய்வாதீனத்தால் வியாஜ்யம் எடுத்துக் கொள்ளப்பட்டால், உம்முடைய வக்கீல் வேறு கோர்ட்டில் வேலையாயிருப்பார்! வியாஜ்யத்தைப் பற்றி ஒன்றும் தெரியாத தன் ஜூனியரை அனுப்பிவிடுவார். நியாயாதிபதி கேட்கும் கேள்விகளுக்கு பதில் உரைக்கத் தெரியாது அவர் விழிப்பார். நியாயாதிபதி உம்மைத் திட்டுவார், வக்கீலும் உம்மைத் திட்டுவார், வக்கீல் குமஸ்தாவும் உம்மால்தான் வியாஜ்யம் கெட்டுப்போய் விட்டது என்று உம்மை வைவார்! எதிராளியின் திட்டுகளுடன் இவைகளையும் நீங்கள் பொறுக்க வேண்டும். இந்தக் கஷ்டமெல்லாம் அனுபவித்த பிறகு, நியாயாதிபதி எப்படி தீர்மானம் செய்கிறுரோ? யாருக்குத் தெரியும்? அவர் லஞ்சம் வாங்குகிற ஆசாமியாயிருந்தால் உம்முடைய சரியான வியாஜ்யம் கூட அதோகதிதான்! இல்லை, உங்களுக்கு அனுகூலமாகத் தெய்வாதீனத்தால் தீர்மானம் ஆச்சுதென்று வைத்துக் கொள்வோம், எதிரி அப்பீல் செய்வான்! அல்லது உமக்கு விரோதமாகத் தீர்மானம் ஆனுல், நீங்கள் அப்பீல் செய்யவேண்டும். உடனே, 'அடியைப் பிடியடாபாரதபட்டா" என்று, செலவும் கஷ்டமும் மறுபடியும் ஆரம்பமாக வேண்டியதுதான். முதல் அப்பீல், இரண்டாவது அப்பீல், ஹைகோர்ட்டு ரிவிஷன், பிரிவிகௌன்சில் அப்பீல்! இதெல்லாம் முடிவதற்குள்ளாக மூன்றுதலை முறை ஆகிவிடும்! ஐயா! இந்த யமவேதனையினின்றும் எப்படியாவது நீர் தப்பித்துக் கொள்ளும். கோர்ட்டுக்குப் போவதைவிட, நரகத்திற்குப் போகலாம்.

கோர்ட்டில் காலை எடுத்து வைப்பதைவிட,நான் அந்தமானுக்கு ஓடிப்போய்விடுவேன் !

அ. அந்தப் பொதிமாட்டிற்காக அவன் எவ்வளவு கேட்டான் ?

கா. அந்தப் பொதிமாடு, தன் குதிரை தன் வேலையாளின் மட்டம், ஜீனிகள், துப்பாக்கிகள், இவைகளெல்லாவற்றிற்காகவும், தான் ஹோட்டல்காரனுக்குக் கொடுக்க வேண்டிய கொஞ்சம் பாக்கிக் காகவும், எல்லாம்சேர்த்து இரு நூறு பொன் கேட்கிறான்.

அ. இரு நூறு பொன்னா !

கா. ஆம்.

அ. (கோபத்துடன் ரங்கத்தில் இங்கு மங்குமாய் நடந்து)சரி.—ஆனால்— கோர்ட்டுக்குத்தான் போகவேண்டும் !

கா. கொஞ்சம் தீர்க்காலோசனை பண்ணுங்கள்.

அ. நான்கோர்ட்டுக்குத் தான் போவேன் !

கா. வீணாகத்தாங்கள் கஷ்டத்திற்கு—

அ. நான் எப்படியும் கோர்ட்டுக்குத் தான் போவேன் !

கா. நீங்கள் இந்த விஷயத்தை மாத்திரம் யோசித்துப் பாருங்கள். கோர்ட்டிற்குப்போனால் மாத்திரம் செலவில்லையா ? நோட்டீசு செலவு, வக்கீல் செலவு, வக்கீல் குமாஸ்தா செலவு, சம்மன் செலவு, சாட்சி சம்மன் செலவு, டிக்ரிநகல்செலவு, உங்களுக்கு விரோதமானால்,அப்பீல் செலவு,இரண்டாவது அப்பீல் செலவு ரிவிஷன் செலவு, பிரிவுகௌன்சில் செலவு ! இதெல்லாம் அல் லாமல் பெய்லீப்புகள் முதல் எத்தனை பெயருக்கு லஞ்சம் கொடுக்க வேண்டும் ! இந்த செலவை யெல்லாம் விட, இந்த மனிதனுக்கு 200 பொன் கொடுத்து விட்டு ஆயு மென்றிருக்க லாம் நீர்.

அ. என்ன ? இருநூறு பொன்னா !

கா. ஆம், அப்படிச் செய்தால் உமக்கும் லாபகாரமாகும். கோர்ட் டுக்குப் போனால் எவ்வளவு மொத்தம் செலவாகுமென்று, ஒரு புள்ளிப்போட்டுப் பார்த்தேன் ; இந்த மனிதனுக்கு இருநூறு பொன் கொடுத்துப் பைசல் பண்ணினால், குறைந்த பட்சம், ஐந்நூறு பொன்னாவது உமக்கு லாபமாகும் என் கணக்கின் படி ; அல்லாமலும் கோர்ட்டின் கஷ்டமுமிராது, உமது காலும் ஓடியாது,மனமும் நிம்மதியாயிருக்கும்,இந்த வக்கீல்கள் கையில் அகப்பட்டு, கஷ்டப் படுவதைவிட, கோர்ட்டுக்குப் போகாம லிருக்க நான் முன்னூறு பொன் கொடுப்பேன்.

அ. அதற்காகப் பயப்படுபவனல்ல, இந்த வக்கீல்கள் என்னை என்ன வேண்டுமென்றாலும் செய்யட்டும்.

கா. உங்களிஷ்டம்—ஆயினும் நானாயிருந்தால், வியாஜ்யத்தின் அருகில் அண்ட மாட்டேன்.

அ. நான் இருநூறு பொன் கொடுக்க மாட்டேன்.

கா. ஆ!—நான் பேசிக் கொண்டிருந்த மனிதன் இதோ வருகிறான்!

செல்வநேசன் மாறுவேடம் பூண்டு வருகிறான்.

செ. காளப்பா! அஸ்வதேவனுடைய தகப்பன் அழகாநந்தன் எங்கிருக்கிறான், எனக்கு கொஞ்சம் தெரிவி!

கா. ஏன் ஐயா?

செ. அந்த ஆசாமி, என்னை கோர்ட்டுக்கு இழுக்கப் போகிறதாயும், என் தங்கையின் கலியாணத்தை ரத்து செய்யப் பிரயத்னப் படுவதாயும் இப்பொழுதுதான் கேள்விப் பட்டேன்!

கா. அப்படிச் செய்ய எண்ணுகிறாரோ என்னமோ அது எனக்குத் தெரியாது; நீர் விரும்புகிற அந்த இறு நூறு பொன்னைக் கொடுக்க இசைய மாட்டேன் என்கிறார்; அது நிரம்ப அதிகம் என்று சொல்லுகிறார்.

செ. என்ன! என்ன சொன்னான்! அப்படியா சமாசாரம் அவன் மாத்திரம் என் கண்ணில் அகப்பட்டால் அவன் தோலை அப்படியே உரித்து விடுவேன்! அதற்காக என்னைத் தூக்கில் போடுவதா யிருந்தாலும்!

(அழகாநந்தன் காளப்பன் பின்னால், செல்வநேசன் கண்ணுக்குப் புலப்படா திருக்கும்படி, மறையப் பார்க்கிறான்.)

கா. ஐயா, அஸ்வதேவருடைய தகப்பனாருக்கு கொஞ்சம் தைரியமுண்டு, ஒரு கால் உமக்கு அவர் பயப்படமாட்டார்.

செ. அவனா? அவனா?—என் கண் எதிரில் மாத்திரம் படட்டும்!—இங்கிருப்பானாகில் இட்சணம் இந்தக் கத்தியை அவன் உடலை ஊடுறுவிச் செல்லச் செய்வேன்!—அது யார் அந்த மனிதன்?

கா. அவரல்ல ஐயா, அவரல்ல.

செ. அவனுடைய சிநேகிதனா என்ன?

கா. இல்லை ஐயா, அவருக்கு ஜன்மவிரோதி.

செ. ஜன்மவிரோதி?

கா. ஆமாம்.

செ. ஆ! நிரம்ப சந்தோஷம்! ஏன் ஐயா இந்தக் கழுதை அழகாநந்தனுக்கு விரோதியா நீர்?

கா. ஆமாம், அதற்கு நான் உத்தரவாதம்.

சே. (முரட்டுத்தனமாய் அவன் கையைப் பிடித்துக் குலுக்கி) உன் கையைக் கொடு! மிகவும் சந்தோஷம்! நான் சத்தியம் செய்கிறேன், எங்கப்பாணை, இதோ என் கையிலிருக்கும் கத்தியின்மீதாணை, நான் அறிந்த எல்லா தெய்வங்களின் மீதாணை!— இன்று சாயங்காலத்திற்குள், அந்தப் படுக்காளி பாதகன் அழகாநந்தன், உம்மைத் தொந்தரவு செய்யாதபடி அவனை யமலோகம் அனுப்பிவிடுகிறேன்—என் வார்த்தையை நம்பும்.

கா. ஐயா, இந்த நாட்டில் அப்மாதிரியாக ஒருவரை கொல்லக் கூடாதுங்கள்.

சே. அதெல்லாம் ஒன்றும் பார்க்கமாட்டேன்! எனக்கென்ன கெட்டுப்போகிறது?

கா. அவர் தன்னைக் காப்பாற்றிக் கொள்ள ஜாக்கிரதையாயிருப்பார் என்று நம்பும்; அவருக்கு, பந்துக்கள், சிநேகிதர்கள், வேலைக்காரர்கள் இருக்கிறார்கள்—உம்முடைய கோபத்தினின்றும் அவரைக் காப்பாற்ற.

சே. எங்கப்பாணை! அது தான் நான் கோருவது! அதைவிட வேறொன்றும் விரும்பேன். (தன் கத்தியை உருவி, நான்கு பக்கமும் ஏதோ மனிதர்கள் இருப்பது போலும், அவர்களைக் குத்திக் கொல்வதுபோலும்,கத்தியை வீசுகிறான்.) அப்படி! அப்படி! போங்கள் யமலோகம்!—ஆ! அவன் தன் பரிவாரங்களுடன் இட்சணம் என் எதிர்ப்படுவானாயின்! ஒரு இருபது முப்பது பெயரை அழைத்துக்கொண்டு வரவேண்டும்! கத்தியும் கையுமாய் என்னை எதிர்க்க வேணுமவன்!—ஆ! பாதகர்களே! என்னை எதிர்க்கும்படியாக அவ்வளவு தைரிய மிருக்கிறதா உங்களுக்கு!—வாருங்கள்! அனுப்புகிறேன் உங்களை யமலோகம்!—தயை கியையெல்லாம் இங்கு கிடையாது!—எதிருங்கள்!—நில்லுங்கள்! குத்துங்கள்!—பின்வாங்காதீர்!—நேராகப் பாருங்கள்! ஆ! பாதகர்களே! கேப்மாரிகளே!—இப்படியா குத்த வேண்டும் உங்களை! போதும் என்கிற வரையில் கொடுக்கிறேன் உங்களுக்கு! எதிருங்களடா எதிருங்களடா என்னை! திருட்டுப் பயல்களே! வாருங்கள்! வாங்கிக் கொள்ளுங்கள்! இதை வாங்கிக் கொள்ளுங்கள்!—இதையும்! இதையும்!—அதையும்— என்ன! பின்னிடுகிறீர்களா? ஓடாதீர்கள்! ஓடாதீர்கள் நில்லுங்கள்!

கா. ஐயையோ ! ஐயா, நாங்களல்ல அவர்கள்.

செ. என்னை ஏமாற்ற முடியாதென்று இதனால் அறிவீர்கள் ! (போகிறான்.)

கா. பார்த்தீர்களா ! இந்த இருநூறு பொன்னுக்காக, எத்தனை பெயர் மாளவேண்டி வருமென்று ? சரி! உங்கள் அதிர்ஷ்டம்! நான் வருகிறேன்.

அ. (நடுநடுங்கி) காளப்பா—

கா. அழைத்தீரா ?

அ. அந்த இருநூறு பொன்னையும் கொடுக்கத் தீர்மானித்தேன்.

கா. அதைக் கேட்க சந்தோஷப்படுகிறேன்—உமது நன்மையின் பொருட்டு.

அ. நீ போய் அழைத்துவா அவனை. என்னிடம் அந்தப் பணம் இருக்கிறது.

கா. அதை என்னிடம் கொடுத்து விடுங்கள், போதும். நீர் வேறொரு மனிதன் என்று அவனுக்குச் சொல்லிவிட்டு, இப்பொழுது நீர்தான் காளப்பன் என்று அவன் எதிரிற் படலாகாது. அன்றியும் அவனை நீர் நேரிற் காண்பீராயின், ஒருவேளை இன்னும் அதிக பணம் கேட்கவேண்டுமென்று எண்ணினாலும் எண்ணுவான்.

அ. ஆமாம், ஆயினும், என் பணம் எங்குபோய்ச் சேர்ந்ததென்று எனக்குத் தெரிந்தால் திர்ப்திகரமாயிருக்கும்.

கா. என்னை நம்பவில்லையா நீர் ?

அ. அப்படியல்ல, ஆயினும்—

கா. ஐயா, இதைக் கொஞ்சம் யோசனை பண்ணிப் பாருங்கள் ; நான் யோக்கியனாகவாவது இருக்க வேண்டும் அயோக்கியனாகவாவதிருக்கவேண்டும். இரண்டிலொன்று ; நான் உங்களை மோசம் செய்வேன் என்று நினைக்கிறீர்களா ? என் எஜமானனது குடும்பத்துடன் சம்பந்தம் செய்ய வேண்டுமென்று விரும்புகிற உங்களுக்கும், என் எஜமானனுக்கும் உதவிசெய்ய வேண்டிய வேலையைத்தவிர, வேறென்றெனக் குண்டோ ? நீர் என்மீது சந்தேகப்பட்டால், இதற்கு மேல் இவ்விஷயத்தில் நான் பிரவேசிக்க வில்லை ; உம்முடைய வியவஹாரங்களை யெல்லாம் சரிப்படுத்த வேறு யாரையாவது பார்த்துக் கொள்ளும்.

அ. ஆனால்—இதை வாங்கிக்கொள்.

கா. வேண்டாம் ஐயா, உம்முடைய பணத்தை என்னிடம் கொடா தீர். வேறு யார் மூலமாகவாவது அனுப்பினால், எனக்கு மிக வும் சந்தோஷமாயிருக்கும்.

அ. சேச்சே ! அப்படிச் சொல்லாதே !—வாங்கிக்கொள்.

கா. வேண்டாம், நான் சொல்வதைக் கேளும், என்னை நம்பாதீர். உம்முடைய பணத்தை நான் அபகரிக்க விரும்ப வில்லை யென்று உமக்கு எப்படித் தெரியும் ?

அ. நான் சொல்வதைக் கேளப்பா, வாங்கிக்கொள் ; இனி ஒன்றும் வார்த்தையாட வேண்டாம்—ஆயினும், அவனிடமிருந்து ஒப் பந்தம் மாத்திரம் ஜாக்கிரதையாக வாங்கிக் கொள்.

கா. அதெல்லாம் என்னிடம் விட்டு விடுங்கள்— நான் ஒரு மடை யன் அல்ல— ஏமாந்து போக.

அ. நான் வீட்டிற்குப் போய் உனக்காகக் காத்திருக்கிறேன்.

கா. நான் தவறாமல் வருகிறேன் அங்கே. (அழகானந்தன் போகிறான்.) ஒரு ஆசாமி தீர்ந்தது. மற்றொரு ஆசாமியைக் கண்டு பிடிக்க வேண்டும்—ஆ ! என் அதிர்ஷ்டம் ! இதோ வருகிறார் அவர். ஒவ்வொருவராக ஸ்வாமியே இவர்களை என் வலைக்குள் சிக்கச் செய்கிறார் போலும் !

கௌரிநாதர் வருகிறார்.

கா. (அவரை பாராதது போல்) ஐயோ ஸ்வாமி ! இப்படிப்பட்ட துர திர்ஷ்டம் நேரிடுமா ? இதை விட ஒரு தகப்பனுருக்கு என்ன கெடுதி சம்பவிக்கக் கூடும் ?—ஐயோ ! கௌரிநாதரே ! நீர் என்ன செய்யப் போகிறீர் ?

கௌ. என்ன சொல்லுகிறான் என்னைப் பற்றி—இந்த துக்க கரமான முகத்துடன் ?

கா. எஜமான் கௌரிநாதர் எங்கிருக்கிறார் என்று எனக்கு யாராவது தெரிவிக்க மாட்டார்களா ?

கௌ. என்னடா அப்பா அது காளப்பா ?

கா. அவரை நான் எங்கு கண்டு பிடிக்கக் கூடும் ? இந்த துக்ககர மான சமாசாரத்தை தெரிவிக்க ?

கௌ. இந்த—என்ன சமாசாரம் ?

கா. ஐயோ ! எனக்கு அவர் அகப்பட வில்லையே.

கௌ. இதோ நான் இங்கே இருக்கிறேனே.

கா. அவர் ஒருவர் கண்ணிலும் அகப்படாத படி அவரை நான் எங் காவது ஒளித்து வைக்க வேண்டும்.

கேள. அடேய்! உனக் கென்ன குருடா? என்னைத் தெரியவில்லையா உனக்கு?

கா. ஆ!—எஜமானே! உங்களை நான் எங்கெங்கு தேடுவது?

கேள. நான் ஒருமணி நேரமாக உன் எதிரில் தான் இருக்கிறேன்!— உம்—என்ன சமாசாரம் இதெல்லாம்?

கா. எஜமானே!—

கேள. என்ன?

கா. எஜமானே!— உங்கள் குமாரன்—

கேள. என்ன, என்ன என் குமாரனுக்கு?

கா. பெரிய கஷ்டத்தில் அகப்பட்டுக் கொண்டிருக்கிறார்!

கேள. என்ன அது?

கா. கொஞ்ச நேரத்திற்கு முன்பாக அவரைச் சந்தித்தேன்; மிகுந்த முகவாட்டத்துடன் இருந்தார், என்னவென்று கேட்டதற்கு, நான் ஏதோ உம்மிடம் அவதூறான விஷயங்கள் அவரைப் பற்றி தெரிவித்ததாகச் சொன்னார்; இது எனக்கும் வருத் தத்தையுண்டு பண்ணியது, அதன்பேரில் இந்த வருத்தத்தைப் போக்கிக்கொள்ள, இருவருமாக ஒரு படகேறிச் சென்றோம் துறைமுகத்திற்குள். அவ்விடம், நாங்கள் பார்த்த கண்காட்சி களுக்குள், துர்க்கி தேசத்திலிருந்து வந்த பெரும் தோணி ஒன்றையும் கண்டோம். அதிலிருந்த அழகிய துர்க்கிதேசத்து வாலிபன் ஒருவன், எங்களுக்குச் சைகைசெய்து, தங்கள் தோணியைப் பார்க்கவரும்படி அழைத்தான் எங்களை. நாங் கள் போனோம். எங்களுக்கும் மிகவும் மரியாதை செய்தான் அவன்; எங்களுக்கு பலஹாரமெல்லாம் கொடுத்தான் தின்ப தற்காக, மிகுந்த ருசிகரமான பழங்களையெல்லாம் கொடுத் தான். உலகத்தில் மிகுந்த ருசிகரமான மதுவைக் கொடுத் தான் நாங்கள் குடிக்க.

கேள. இதில் இவ்வளவு வருத்தப் படவேண்டிய விஷயம் என்ன?

கா. கொஞ்சம் பொறுங்கள் எஜமானே, இதோ வந்து விட்டேன். நாங்கள் இவற்றை யெல்லாம் சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது, தன் தோணியை சமுத்திரத்தில் ஓட்டி விட்டான்! துறைமுகத்தை விட்டு கொஞ்சதூரம் போனவுடன், என்னை

மாத்திரம் ஒரு சிறு படகில் போட்டு, தனக்கு நீர் உடனே ஐந் நூறு பொன் கொடுத்தனுப்பாவிட்டால், உம்முடைய குமா ரனை, அரேபியா தேசத்திற்குக் கொண்டு போய் அடிமையாக விற்று விடு வதாக, உம் மிடம் சொல்லச் சொன்னான்!

கேள. என்ன இழவாயிருக்கிறது ! ஐந்நூறு பொன்னா ?

கா. ஆம் எஜமானே !—அன்றியும் இன்னும் இரண்டு மணி நேரத் திற்குள்ளாக அதை அவனிடம் கொண்டு வரவேண்டு மென்று கட்டாயப் படுத்தியிருக்கிறான்.

கேள. ஐயோ ! அவனைத் தூக்கிலிட ! திருட்டுக் கழுதை ! இப்படி என்னை மோசம் செய்யலாமா ?

கா. ஆகவே, ஐயா, உம்முடைய பிரியமான குமாரன் அடிமையாகிக் கஷ்டப் படாமலிருக்கும் படிச் செய்ய, நீங்கள் உடனே பிர யத்னப் படவேண்டும்.

கேள. இந்தக் கழுதை அந்தத் தோணியின் அருகில் ஏன் போனான் ?

கா. அவருக்கு என்ன தெரியும் இப்படி நேரிடப்போகிறதென்று?

கேள. காளப்பா, நீ ஓடிப்போய் இந்தத் துலுக்கனிடம், உடனே அவ னைப் பிடித்துவா. நான் போலீஸ்காரர்களை அனுப்புவதாக தெரிவி.

கா. சமுத்திரத்திலிருக்கும்போது இந்த போலீஸ்காரர்கள் என்ன செய்வது ? அவர்கள் என்ன மடையர்களா அங்கே போக ?

கேள. இந்தக் கழுதை அந்தத் தோணியண்டை ஏன் போனான் ?

கா. நம்முடைய தலைவிதி இவ்வாறு நம்மை தவறி நடக்கச் செய் கிறது—சில சமயங்களில்.

கேள. காளப்பா, இந்த விஷயத்தில் எனது உண்மையான ஊழிய னாக நடக்கவேண்டும்.—எப்படியும் நீ ஒன்று செய்யவேண்டும்.

கா. என்ன செய்யவேண்டும் நான் ?

கேள. நீ போய், அவன் கேட்கிற தொகையை நான் சேகரித்தனுப் பும் வரையில், என் குமாரனுக்கு பதிலாக நீ ஜாமீனாக இருப்ப தாகச் சொல்லி, அவனுக்கு பதிலாக நீ அங்கிருந்து என் குமாரனை அனுப்பும்படி நீ அவனுக்குத் தெரிவிக்கவேண்டும்.

கா. ஐயோ ! எஜமானே! நீர் என்ன சொல்கிறீர் என்று நீர் யோசிக் கிறீரா? உமது குமாரனை விட்டு, கவைக்கு உதவாத என்னை ஜாமீனாக அந்த துலுக்கன் ஒப்புக்கொள்ள என்ன மடையனா ?

கேள. இந்தக் கழுதை அந்தத் தோணியண்டை ஏன் போனான் ?

கா. இம்மாதிரி துர்திர்ஷ்டம் நேரிடுமென்று அவர் கனவிலும் நினைக்கவில்லை—ஐயா, இன்னும் இரண்டுமணி சாவகாசம்தான் இருக்கிறதென்பதை கவனியும்

கேள. அவன் எவ்வளவு கேட்கிறான் என்றாய் ?

கா. ஐந்நூறுபொன்.

கேள. ஐந்நூறுபொன் !—அவனுக்கு மனோசாட்சி என்பதொன்றில்லையா ?

கா. துலுக்கனுக்கு அது ஏதுங்கள் ?

கேள. ஐந்நூறு பொன் என்றால் எவ்வளவு என்று அவனுக்குத் தெரியுமா ?

கா. ஆம் ஐயா, ஐயாயிரம் ரூபாய் ஆகிறதென்று அவனுக்குத் தெரியும்.

கேள. கண்ணை மூடித் திறப்பதற்குள் ஐயாயிரம் ரூபாய் பெறமுடியுமென்று நினைக்கிறானா என்ன அந்தப் படுபாவி ?

கா. இப்படிப்பட்ட மனிதர்களுக்கு புத்தியென்பது ஏதுங்கள் ?

கேள. ஆயினும்—இந்தக் கழுதை அந்ததோணியண்டை ஏன் போனான் ?

கா. அது என்னவோ வாஸ்தவம்தான். பின்னால் நேரிடப்போகிறதை முன்னால் எப்பொழுதும் அறிவது கஷ்டம் பாருங்கள். —ஐயா, கொஞ்சம் கருணை கூர்ந்து சீக்கிரம் பணம் சேகரிக்கும் வழியைப் பாருங்கள்.

கேள. இந்தா, இதோ என் பெட்டியின் சாவி இருக்கிறது.

கா. நல்லது.

கேள. அதைத் திறந்தால்—

கா. அப்படியே. (போகப்பார்க்கிறான்.)

கேள. கொஞ்சம் பொறு—அதன் இடது பக்கத்தில் ஒரு பெரிய சாவி இருக்கிறது—என்மேல் மாடியைத் திறப்பதற்கு.

கா. ஆம்.

கேள. அதை திறந்து கொண்டு போவாயாயின், அதன் ஒருமூலையில் ஒருபெரிய அழுக்குக் கூடையிருக்கிறது, அதிலுள்ள பழந் துணிகளை யெல்லாம் எடுத்துக் கொண்டு போய், கடையில் விற்று என் குமாரனை மீட்கவேண்டிய பொருளை சேகரிப்பாய்.

கா. (சாவியை அவரிடம் திருப்பிக் கொடுத்து) ஐயோ !எஜமானே, நீங்கள் என்ன கனவு காண்கிறீர்களா ? என்ன, அதை யெல்லாம்

விற்ருலும் நூறுரூபாய் கூட கிடைக்காதே!—அன்றியும் எனக்குக்காலம் இரண்டு மணிதான் என்பதை கவனியும்.

கௌ. ஆமாம்—அந்தக் கழுதை அந்தத் தோணியண்டை ஏன் போனுன்?

கா. ஐயோ! வீணுக ஏன் உடம்பை அலட்டிக் கொள்கிறீர்கள்? அந்தத் தோணியை விட்டுத் தொலையும்; மணி ஓடுகிறது, சீக்கிரம் பணம் சேகரிக்காவிட்டால் உம்முடைய குமாரனை இழந்தவரே நீர்—ஐயோ! சின்ன எஜமானே!—இந்த ஜென்மத்தில் நான் உம்மை மறுபடியும் காணப்போகிறேனே என்னவோ? இப்படி நான் பேசிக் கொண்டிருக்கும் போதே உம்மை அடிமையாக அரேபியா தேசத்திற்கு கொண்டு போகிருர்களே!—ஆயினும் என்னல் ஆனப் பிரயத்னம் பட்டேன் என்பதை அந்த ஈசன் அறிவார். உம்மை அடிமைத் தனத்தினின்றும் மீட்காவிட்டால், உம் மீது பிரிய மில்லாத உமது தகப்பனுர் தான் அதற்கு உத்தரவாதம்—நான் என்ன செய்வது?—(போவதுபோல் பாசாங்கு செய்கிருன்.)

கௌ. பொறு—காளப்பா—இந்தப் பணத்தைப் போய் கொண்டு வருகிறேன்.

கா. சீக்கிரம் சீக்கிரம் ஐயா! எங்கே இரண்டு மணி அடித்து விடுகிறதோ என அஞ்சுகிறேன்.

கௌ. நாநூறு பொன் என்று சொன்னுயல்லவா?

கா. இல்லை ஐந்நூறுபொன்.

கௌ. ஐந்நூறு பொன்னு?

கா. ஆமாம்.

கௌ. ஹா!—இந்தக் கழுதை அந்தத் தோணியண்டை ஏன் போனுன்?

கா. அது வாஸ்தவம் தான்—நீங்கள் துரிதப் படுங்கள்.

கௌ. படகில் போனவன்—அதனருகில் ஏன் போனுன்?

கா. வாஸ்தவம்—சீக்கிரம் பாருங்கள்.

கௌ. ஹா! அந்தத் தோணி பாழாய்ப்போக!

கா. (ஒருபுறமாக) அந்தத்தோணி பிசாசு விடாது அவரை!

கௌ. இந்தா காளப்பா, இந்த ஐந்நூறு பொன்னை எனக்கு சற்று முன்பாக ஒருவன் கொடுத்தான் என்பதை மறந்தேன்—இதற்குள்ளாக இதை நான் விட்டுப் பிரிய வேண்டு மென்பதை நான்

நினைக்கவில்லை !—(பொன்னிறைந்த பையை காளப்பனிடம் நீட்டியும், அவனிடம் அதைக் கொடுக்காது கோபத்துடன் இந்தப் பக்கம் அந்தப்பக்கமாக கையை வீசுகிறான், காளப்பன் அதைப்பற்றமுயலுகிறான்.) இந்தா—போய் என் குமாரனை மீட்டுவா—

கா. அப்படியே ஐயா.

கேள. ஆயினும் அந்தத் துர்க்கி தேசத்தானை, கொலை பாதகனென நான் அழைத்ததாகச் சொல்!

கா. அப்படியே.

கேள. கொடுந்துரோகி !

கா. ஆமாம்.

கேள. நன்றிகெட்ட பாபி ! திருட்டுக்கழுதை !

கா. ஆமாம்—சந்தேகமில்லை—அதெல்லாம் எனக்கு விட்டு விடுங்கள்.

கேள. இந்த ஐந்நூறு பொன்னையும் என்னிடமிருந்து, ஒரு நியாயமுமில்லாமல் கொள்ளையடித்தான் என்று கூறு.

கா. அப்படியே.

கேள. இதை அவனுக்குச் சொந்தமாக, இந்த உலகத்திலாவது, மறு உலகத்திலாவது கொடுக்கவில்லையென்று, உறுதியாய் நம்பும்படிச் செய்.

கா. நிரம்ப சரி.

கேள. அவன் மாத்திரம் என் கண்முன் அகப்படுவானாயின், நான் பழிவாங்குவேன் என்று சொல்.

கா. ஆமாம்.

கேள. (பையை ஜேபியில் வைத்துக்கொண்டு) போ சீக்கிரம்—போய் என் குமாரனை அழைத்துவா. (போகப் பார்க்கிறான்.)

கா. ஐயா, எஜமானே !

கேள. (திரும்பிப் பார்த்து) என்ன அது ?

கா. கொஞ்சம் வாருங்கள். எங்கே பணம் ?

கேள. உன்னிடம் கொடுக்கவில்லையா ?

கா. இல்லை—வாஸ்தவமாக—உங்கள் ஜேபியிலேயே வைத்துக் கொண்டீர்கள்.

கேள. ஹா ! இந்தக் கஷ்டமானது என் புத்தியையே கலக்கி விட்டது!

கா. அதற்கு சந்தேகமில்லை. (பையை வாங்கிக்கொண்டு)

கேள. உம்!—இந்தக் கழுதை அந்தத் தோணியண்டை ஏன்போனான்? அந்தத் தோணி பாழாய்ப்போக!—அந்தத் துர்க்கி தேசத்தான் எழுவெடுக்க! (போகிறான்.)

கா. நான் அவரிடமிருந்து சொலோபஞ்செய்த ஐந்நூறு பொன்னை மறக்க முடியாது அவரால், ஆயினும் அவரை இதனுடன் விட்டேனில்லை, அவரது குமாரன் விஷயமாக அவர் என்னை மோசம் செய்ததற்காக, மற்றொரு விதத்தில் பழி வாங்குகிறேன்.

அஸ்வதேவரும் லீலாநாதரும் வருகிறார்கள்.

அ. அப்பா, காளப்பா, என் விஷயத்தில் காரியம் கைகூடியதா?

லீ. என் கலியாண விஷயமாக, நான் கடைத்தேறும் மார்க்கம் ஏதாவது கண்டு பிடித்தனையா?

கா. அ(ஸ்வதேவருக்கு) இந்தாரும், உம்முடைய தகப்பனாரிடமிருந்து நான் பெற்ற இருநூறு பொன்.

அ. ஆ! என்னை சந்தோஷத்தில் மூழ்கவைக்கிறாய்!

கா. (லீலாநாதருக்கு) உமக்காக நான் ஒன்றும் செய்வதற்கில்லாமற் போயிற்று,

லீ. (போகயத்னித்து) ஆயின் நான் மடியவேண்டியவனே! சரோஜதளநேத்ரி என்னிடமிருந்து பிரிக்கப்பட்டால், நான் உயிர் வாழவேண்டிய நிமித்தியமில்லை.

கா, வாரும் வாருமிப்படி, அவசரப்படாதீர். ஏன் அவ்வளவு கோபமாய் ஓடிப்போகிறீர்?

லீ. (திரும்பி) நான் எக்கதியானால் என்ன இனி?

கா. வாரும்—இதோ நீர் வேண்டியது என்னிடமிருக்கிறது.

லீ. (அவனிடம்விரைந்து வந்து) ஹா! என் உயிரை அளிக்கின்றாய் நீ.

கா. ஆனால் ஒரு நிபந்தனைக் குட்படவேண்டும் நீர், அவர் என்னை ஏமாற்றியதற்காக, உம்முடைய தகப்பனார்மீது நான் பழி வாங்க எனக்கு உத்தரவு கொடுக்கவேண்டும்.

லீ. உன்னிஷ்டம்போல் செய்.

கா. இவர் சாட்சியாக நீர் எனக்கு வாக்களிக்கின்றீர்?

லீ. ஆம்.

கா. ஆனால், இதோ ஐந்நூறு பொன் (கொடுக்கிறான்.)

லீ. நான் உடனேபோய், என் காதலியை மீட்டு வருகிறேன்.

(அஸ்வதேவரும் லீலாநாதரும் ஒவ்வொரு பக்கமாகப் போகிறார்கள்.)

காட்சி முடிகிறது.

---

## மூன்றும் அங்கம்.

**இடம்**—ஒரு தோட்டத்தைச் சார்ந்த பிரதேசம்.

*சரோஜதளநேத்ரி, யாகசேனை, காளப்பன், செல்வநேசன் வருகிறார்கள்.*

செ. ஆமாம், உங்கள் காதலர்கள், நீங்கள் இருவரும் இங்கு தங்கி யிருக்கவேண்டுமென்று தீர்மானித்திருக்கிறார்கள்; அவர்கள் எங்களுக்கிட்ட கட்டளையைத்தான் நாங்கள் நிறைவேற்று கிறோம்.

யா. இங்ஙனம் கட்டளை யிட்டது எனக்கு மிகவும் சம்மதமே. இப்பெண்மணி என் தோழியாயிருப்பது எனக்கு மிகவும் சந் தோஷத்தைத் தருகிறது. எங்கள் காதலர்கள் அன்யோந்யமா யிருப்பது போல நாங்களும் சிநேகிதர்களாகாவிட்டால், அது என் தவறாகாது.

ச. அங்ஙனமே நானும் கோருகிறேன். சிநேகமானது என்னரு கில் வந்தால் அதைத் தடுப்பவள் நானல்ல.

கா. காதல் அருகில் வந்தாலோ ?

ச. காதல் வேறு விஷயம். அதில் கொஞ்சம் அபாயமிருக்கிறது; அதில் நான் அவ்வளவு தைரிய முடையவளல்ல.

கா, என்னுடைய எஜமானுக்கு உம்முடைய ஹிருதயத்தை நீர் முற்றிலும் கொடுக்க வில்லை என்றெண்ணுகிறேன். உம் பொருட்டு அவர் இப்பொழுது செய்தது, உம்முடைய ஹிரு தயத்தை அவருக்கு இணங்கும் படிச் செய்ய வேண்டும்.

ச. என்னைச் சிறையினின்றும் நீக்கியதினால், அவருக்கு இணங்கு வேன் என்று நினைப்பாராயின் அது தவறாகும். என்னை அக் கினி சாட்சியாகக் கடிமணம் புரிந்தாலொழிய அவர் காத லுக்கு நான் இணங்கேன்.

கா. அதற் கென்ன சந்தேகம் ? அவர் வேறு விதமாக எண்ணங் கொண்டிருப்பதாயின் இதற்கு நான் உட்பட்டிருப்பேனோ ?

ச. நீர் அப்படி சொல்வதினால் அதை நம்புகிறேன்—ஆயினும் அவர் தந்தை ஏதாவது ஆட்சேபணைகள் செய்வாரென்று எண்ணுகிறேன்.

கா. அதை யெல்லாம் அகற்ற வழி கண்டு பிடிப்போம் அஞ்சாதீர்.

யா. நம்மிருவருக்கும் ஓரேவிதமான துர் அதிர்ஷ்டம் நேர்ந்தது நம்மை அத்யந்த சிநேகிதர்களாக்க வேண்டும். நாமிருவரும் ஓரே துர்க்கதியிலிருக்கிறோம், ஓரே மாதிரியான துர் அதிர்ஷ்டம் நேர்ந்திருக்கிறது நம்மிருவருக்கும்.

ச. ஆயினும், உனக்கு இந்த அனுகூல மிருக்கிறது ; நீ இன்னாருடைய மகள் என்று உனக்குத் தெரியும், அதைக் கொண்டு நீ எல்லாவற்றையும் சரிப்படுத்திக் கொள்ளலாம், உன் கருத்திற்கினிய காதலனைக் கட்டாயமாய் கடிமணம் புரியலாம். என் விஷயத்திலோ நான் அநாதையாயிருக்கிறேன். என் கதியோ பணத்தின் மீதே கருத்தாயிருக்கும் தந்தையின் மனதைச் கரையச் செய்யாது.

யா. ஆயினும், உனக்கு இந்த அநுகூல மிருக்கிறதே ; இன்னொரு பெண்ணைக் கொண்டு உன் காதலனை உன்னிடமிருந்து பிரித்திட யத்னம் செய்யப்படவில்லையே ?

ச. நம்முடைய காதலன் மனம் மாறும் என்பதல்ல, இவ்விஷயங்களிலெல்லாம் பெறுத்த அபாயம். நாம் ஜெயித்தது நம்மை விட்டுப் போகாது என்று நாம் ஒருவிதத்தில் நம்பலாம் ; இதிலெல்லாம் நாம் பயப்பட வேண்டியது என்ன வென்றால், தகப்பனுருடைய பலாத்காரமே ; அதற்கு முன்பாக வெறுங்காதல் பயன்படாது.

யா. ஐயோ ! காதலானது இக்கஷ்டங்களுக் கெல்லாம் ஆளாவானேன் ? உண்மையில் காதல் கொண்ட இருவர் ஒருங்குசேர, இடையூறுகளே இல்லாதிருந்தால் அதைவிட சுகமென்ன விருக்கிறது இவ்வுலகில் !

கா. அது வாஸ்தவமல்ல. காதல் விஷயத்தில் கஷ்டங்களே நேரிடாவிட்டால் சுகமில்லை, அப்படிப்பட்ட சுகம் ருசியற்றதாம் ; இல்வாழ்க்கையில் இடையூறுகள் நேர்ந்தால்தான் இன்பம் பெருகும் ; சூழுங் கஷ்டங்களை யெல்லாம் அகற்றிச் சுகம்பெருவதே பேரின்பமாம்.

ச. அதிருக்கட்டும், காளப்பா, அந்தக் கிழவோபியிடமிருந்து நீ பணம் பரித்த சூழ்ச்சியைப்பற்றி எங்களிடம் சொல். அது மிகவும் விநோதமானதாய்த் தானிருக்கவேண்டும், அந்தக்கதையைக் கேட்டு நாங்கள் சந்தோஷப் படட்டும்.

கா. இதோ செல்வநேசனிருக்கிறான், என்னை விட அவன் வேடிக்கையாய்ச் சொல்வான் இக்கதையை ; எனக்குக் கொஞ்சம்

வேலையிருக்கிறது, நான் கொஞ்சம் பழிவாங்க வேண்டி யிருக்கிறது, அதை முடித்து சந்தோஷப்படும் விதத்தைப் பார்க்க வேண்டும் விரைவில்.

செ ஏனடா அப்பா, பாழாய்ப்போன இந்தக் கஷ்டங்களிலெல்லாம் நீயாகப்போய் தலையை நுழைத்துக் கொள்ளுகிறாய் ?

கா. கஷ்டமான காரியங்களைச் சாதிப்பதுதான் எனக்கு சந்தோஷத்தைத் தருகிறது.

செ. என் சொற்படி கேட்பதானால், நான் முன்பே உனக்கு கூறியபடி இந்தக் காரியத்தை விட்டுவிடுவாய்.

கா. மாட்டேன், இதில் என்மனம் உந்துகிறபடியே நடப்பேன் நான்.

செ. இப்பொழுது என்ன குறும்பு செய்யப்போகிறாய் !

கா. இப்பொழுது உனக்கு அந்தக் கவலை யேன் ?

செ. வீணாக உன்முதுகில் அடிவாங்க வழிதேடுகிறாயே என்றுதான்.

கா. சரி, அப்படி அடி விழுவதானாலும்,என் முதுகில் விழப்போகிறதே யொழிய, உன் முதுகில் விழப்போகிற தில்லையே ?

செ. அது வாஸ்தவம் தான், உன் முதுகு உனக்குத் தானே சொந்தம், அதை உன் இஷ்டப்படி உபயோகிக்கலா மல்லவா நீ ?

கா. இம்மாதிரியான யோசனைகளெல்லாம் என்னைத் தடுக்கமாட்டா, என்னமோவரப் போகிற தென்று பயந்து, தைரியமாய் ஒரு காரியத்தையும் செய்யாத கோழைமனதை நான் வெறுக்கின்றேன்.

ச. அப்பா, உன் உதவி எங்களுக்கு வேண்டும்.

கா. நீங்கள் உள்ளேபோங்கள்; நான் சீக்கிரம் உங்களிடம் வந்து சேருகிறேன். (மற்ற மூவரும் போகிறார்கள்.)— என்ரகசியத்தை இவர்கள் அறிந்து கொண்டார்கள் என்றுகூற இடங்கொடுப்பேனா? சிலரகசியங்களை அப்படியே மனதிலேயே போட்டு வைக்க வேண்டும், ஒருவரிடமும் வெளியிடலாகாது.

கௌரிநாதர் வருகிறார்.

கௌ. என்ன காளப்பா, என் குமாரன் சமாசாரம் என்ன ?

கா. உம்முடைய குமாரனைப்பற்றி உமக்குக் கவலையே வேண்டாம், அவரை மீட்டு ஒரு பத்திரமான இடத்தில் வைத்திருக்கிறேன்; ஆயினும் எதிர் பார்க்கக் கூடாத ஒரு பெரிய விபத்து உமக்கு வந்திருக்கிறது. நீங்கள் உம்முடைய வீட்டிலேயே இருந்திருந்தால் மிகவும் நலமாய் இருக்கும்.

கேள. சமாசாரம் என்ன ?

கா. நான் இப்படிபேசிக் கொண்டிருக்கும் பொழுதே, உம்மைக் கொல்வதற்காக ஒருவன் உம்மைத் தேடிக்கொண்டிருக்கிறான், எங்ஙனும்.

கேள. என்னையா ?

கா. ஆம்.

கேள. யார் தேடுவது ?

கா. அஸ்வதேவர் கலியாணம் செய்துகொண்ட பெண்ணின் சகோதரன். அவர்கள் கலியாணத்தை ரத்து செய்ய முயல்வதின் முக்கிய காரணம், தன் தங்கையிருக்கும் ஸ்தானத்தில் உம்முடைய குமாரத்தியை நீர் வைக்க விரும்புவதே யென்று அவன் நம்புகிறான் ; அப்படி நம்பினவனாய், தன் கோபத்திற்கு உம்மை ஆளாக்கி, தன் மானத்தின்பொருட்டு உம்மைக் கொன்று பழிவாங்கத் தீர்மானித்திருக்கிறான் ; அவனுடைய நண்பர்களும்—எல்லோரும் அவனைப்போன்ற கத்திகட்டி சிப்பாய்கள்—எங்கும் தேடுகிறார்கள்—உம்மைப்பற்றி விசாரித்துக் கொண்டு; அவனுடைய பட்டாளத்தைச் சேர்ந்த சில ராணுவ வீரர்கள் எதிர்ப்படுபவர்களையெல்லாம் உம்மைப்பற்றி விசாரிப்பதை என் கண்ணாரக் கண்டேன், பல இடங்களில் ; அவர்களில் சிலர் கூட்டமாய் உம்முடைய வீட்டை நான்கு புறமும் சூழ்ந்திருக்கின்றனர். உம்முடைய வீட்டைச் சுற்றி முற்றுகைபோட்டமாதிரி இருக்கிறார்கள், நீர் உம்முடைய வீட்டிற்குப் போவதும் கஷ்டம் ; எந்தப்பக்கம் நீர் போனபோதிலும் அவர்கள் கையில் விழவேண்டியதுதான்.

கேள. (பயந்து) அப்பா, காளப்பா, நான் என்ன செய்வது ?

கா. எனக்கொன்றும் தோன்ற வில்லை ஐயா ; பெரிய பயங்கரமான சமாசாரமாயிருக்கிறது—உம்மைப்பற்றி நினைத்தால் நடுக்கமெடுக்கிறதெனக்கு ! அன்றியும்—பொறுங்கள் ! (திரும்பி யாரையோ தூரத்தில் பார்த்து பயப்படுவது போல அபிநயிக்கிறான்.)

கேள. (நடுங்கி) ஹா !—

கா. (அவன் பக்கம் திரும்பி) இல்லை, இல்லை—ஒன்றுமில்லை.

கேள. இந்த சங்கடத்தினின்றும் என்னைத் தப்பு விக்க ஏதாவது ஒரு மார்க்கம் பார்க்கமாட்டாயா ?

கா. எனக்கு ஒருமார்க்கம் தான் தோற்றுகிறது ; ஆனால், அதனால் எனக்கே கஷ்டமாய் முடிந்தாலும் முடியும்.

கேள. அப்பா ! காளப்பா ! நீ எனது உண்மையான ஊழியன் என் பதைக் காண்பி ; என்னைக் கைவிடாதே, உன்னை வேண்டிக் கொள்ளுகிறேன்.

கா. அப்படியே மனப் பூர்வமாய்ச் செய்கிறேன் ; உம்மிடம் எனக்குள்ள பிரீதியானது உம்மை ஓர் உதவியுமின்றி விட்டுப்போகச் செய்யாதென்னை.

கேள. அதற்காக உனக்கு ஏதாவது பரிசளிப்பேன் என்று உறுதியாய் நம்பு—இந்த சட்டையை உனக்குத் தருகிறேன்—இன்னும் கொஞ்சம் நாள் நான் போட்டுக் கொண்டு பழசானபின்—

கா. சரி, உம்மைக் காப்பாற்றும் பொருட்டு நான் யோசித்திருக்கிற வழி ஈதாகும்—நீர் இந்தக் கோணிப் பைக்குள் புகுந்துகொள்ளும்—ஹா ! (திரும்பிப்பார்த்து)

கேள. (யாரோ வருவதாக எண்ணி) ஐயோ !

கா. இல்லை இல்லை, இன்னும் ஒருவரும் வரவில்லை—நான் சொல்லுகிறபடி செய்யும். நீர் இதற்குள் ஒளித்துக்கொள்ளும்—ஒரு அணுவளவும் அசையாதீர் ; ஏதோ சாமானைக் கோணியில் தூக்கிக் கொண்டு போவது போல், என் முதுகின் பேரில் உம்மைப் போட்டுக் கொண்டு, உம்முடைய பகைவர்களின் மத்தியில் நுழைந்து, உம்முடைய வீட்டிற்குக் கொண்டு போய்ச் சேர்க்கிறேன். அங்கு போய்ச் சேர்ந்த பிறகு, கதவுகளையெல்லாம் தாளிட்டுக் கொண்டு, அவர்கள் உமக்கு ஒருதீங்கும் செய்யாதபடி, போலீஸ்காரர் உதவியை நாடுவோம்.

கேள. இது ஒரு நல்ல யோசனையே.

கா. இதை விட மேலானது கிடையாது. இதன் பயனைப் பார்ப்பீர் சீக்கிரம்—(கோணிக்குள் புகச்செய்து, பிறகு ஒரு புறமாக) என்னை ஏமாற்றி யதற்காக வட்டியுடன் வாங்குகிறேன்.

கேள. (கோணிக்குள் இருந்து தலையை நீட்டி] என்ன அது ?

கா. உம்முடைய பகையாளிகள் நன்றாய் ஏமாந்துபோவார்கள்என்று சொன்னேன்—கோணியின் கீழே பதுங்கிக் கொள்ளும்—முக்கியமாக இதனுள் நீர் இருப்பதை அவர்கள் அறியும்படி ஒன்றும் செய்யாதீர்—என்ன நேரிட்டாலும் கப்சப் பென்றிரும், அசையாதீர்.

கௌ. அதை நான் பார்த்துக் கொள்ளுகிறேன்—என்னைக் காப்பாற்றிக் கொள்ள எனக்கு வழி நன்றாய்த் தெரியும்—

கா. ஒளிந்துக் கொள்ளும்! ஒளிந்துக் கொள்ளும்! இதோ ஒரு கொள்ளைக்காரன் உம்மைத் தேடிக்கொண்டு வருகிறான்! (கௌரிநாதர் கோணிப் பைக்குள் புகுந்து தலையை மூடிக்கொண்ட பிறகு, தன் குரலைமாற்றி)—"என்ன துரதிர்ஷ்டம்! இந்த கௌரி நாதரைக் கொல்லும்படியான பாக்கியம் எனக்குக் கிடைக்காதா? தயவு செய்து யாராவது, அவன் எங்கிருக்கிறானென்று எனக்குத் தெரிவிக்க மாட்டார்களா?" (கௌரிநாதருக்கு தன் சொந்த குரலுடன்) ஸ்! அசையாதீர் (மாறிய குரலுடன்) "எங்கப்பாணை! அவன் பாதாளத்தில் ஒளிந்திருந்த போதிலும் அவனை கண்டு பிடிக்கிறேன்." (கௌரிநாதருக்கு சொந்த குரலுடன்) நீர் உள்ளேஇருப்பதாகக் காட்டாதீர்—(மாறிய குரலுடன்)"ஹா! யாரடா அப்பா, அங்கே, கோணிப்பையை வைத்துக் கொண்டிருப்பவன்?" (யாரோ ஒருவனுடன்சம்பாஷிப்பதுபோல் குரலை மாற்றி மாற்றிப் பேசுகிறான்.) ஏன் ஐயா? "கௌரி நாதரிருக்குமிடத்தை எனக்குச் சொல்வாயாயின், உனக்கு ஒரு பொன் தருகிறேன்."—கௌரி நாதரையா தேடுகிறீர் நீர்?—"நான் எங்கப்பாணை அவனைத்தான் தேடுகிறேன்"—எதற்காக ஐயா? —"எதற்காகவா?"—ஆம்—"இந்தத் தடியால் அவன் முதுகெலும்பை யெல்லாம் நொருக்கி, அவன் உயிரை வாங்கவேண்டும் நான்"—ஐயா, அவர் பெரிய மனுஷ்யருங்கள், அவரை நீங்கள் தடியால் அடிக்கலாமா? அவர்இதை யெல்லாம் பொறுக்க மாட்டாருங்கள்—"யார்? அந்த பயித்தியம் கௌரிநாதனா? அந்தக் கழுதையா? அந்தமடையனா?" ஐயா, கௌரிநாதர் பயித்தியக் காரர் அல்ல, கழுதையுமல்ல, மடையருமல்ல, இப்படி யெல்லாம் அவரைப்பற்றி நீங்கள் அவதூறாகப் பேசக்கூடாதுங்கள்"-"நீ யார் அது? என்னிடம் இப்படி அதனப் பிரசங்கித்தனமாய் பேசுவது?" அவரில்லாத காலத்தில் அவரைப்பற்றி நீர் அவதூறாகப் பேசியதால், நான் அவர் மானத்தைக்காப்பாற்ற வேண்டியது என்கடமையாகும்-"நீ என்ன இந்த கௌரிநாதன் நண்பனா?"—ஆம் ஐயா—"ஆ! அகப்பட்டாய் என் கையில்! —அவனுடைய சிநேகிதனைபடியால் இதை வாங்கிக்கொள்!" (கோணிப்பையை நன்றாய்ப் புடைக்கிறான்.) "இதோ! அவனுக்குப்

பதிலாக இதை வாங்கிக்கொள்! அச்சாரமாக"—ஐஐயோ! ஐஐயோ! மெல்ல! மெல்ல! ஐயா! 'போகழுதை! இவைகளை யெல்லாம் நான் அனுப்பியதாக அவனிடம் கொண்டு போய்க் கொடு—நான் வருகிறேன்''—ஆ! இந்தப் படுக்காளியை யமன் கொண்டு போக! அப்பப்பா!—(தான்தான் அடிபட்டதுபோல் பாசாங்கு செய்து முதுகைத் துடைத்துக்கொள்ளுகிறான்.)

கேள. (கோணிப்பையிலிருந்து தலையை நீட்டி) ஆ!—காளப்பா!—இனி என்னால் பொறுக்க முடியாது!

கா. ஐயோ! எஜமானே, என்முதுகெல்லாம் போச்சுது! உடம் பெல்லாம் நோகிறது!

கேள. ஏன்? என் முதுகிலல்லவோ விழுந்தது அடி?

கா. இல்லை எஜமானே!—என் முதுகில்தானடித்தான்.

கேள. நீ சொல்வது எனக்கு அர்த்தமாக வில்லை—என் முதுகி லல்லவோ அடிகள் விழுந்தன. இன்னும் எனக்கு நோவெடுக் கிறதே.

கா. இல்லை ஐயா. நான் சொல்வதைக்கேளும். அந்தத் தடியின் முனை உமது முதுகில் தாக்கியிருக்கலாம், அடியெல்லாம் எனக் குத்தான்!

கேள. அப்படியாயின், எனக்குப்படாதபடி இன்னும் கொஞ்சந்தூரம் போயிருக்கவேண்டும் நீ—

கா. (அவன் தலையை கோணிக்குள் அமுக்கி) ஜாக்கிரதை! ஜாக்கிரதை! இதோ இன்னொருவன் வருகிறான்—முரட்டுத் துலுக்கனைப் போல் இருக்கிறான்! (முன்போலவே, குரலை மாற்றி மாற் றிப் பேசுகிறான்) "அரே! தூத்தேரி! நம்பள் எங்கே யும் ஓடிப்பாக்றான்! இந்த சைத்தான் கோரிநாத், நம் பள் கிட்ட ஆப்பிட்டான் இல்லே!''—அப்படியே அசை யாமலிருங்கள்—"அரே!, பயில்வான், நிம்பள்கி இந்த கோரி நாத் இருக்கர எடம் தெரிஞ்சாக்கே, நம்பள்கிட்ட சொல்ராம்; நம்பொ அவனெபாக்கணும்''—ஐயா சாயபு, கௌரிநாதர் இருக்கிற இடம் எனக்கு தெரியாதுங்கள்—"அரே! நம்பள் கிட்ட நெஜம் சொல்ராம் பாய்! அவன்கி நம்பள் ரொம்ப தொந்தரவு பண்றான் இல்லெ. இந்த தடியாலே அவன்கி சொக் காய்லே இருக்கறதும்பு கொஞ்சம் தட்டி, இந்த கத்தியாலே

நாலஞ்சு குத்து அவன் மார்லே குத்துணும் பாய்!''—சாயபு, வாஸ்தவமாக அவரிருக்கிற இடம் எனக்கு தெரியாதுங்கள்—"அதோ அந்தக் கோணியிலே என்னமோ அசைதே அது என்ன?''—அது ஒண்ணுமில்லே சாயபு—"அதுக்குள்ளே என்னமோ தமாஷ் இருக்குது பாயி''—ஒன்றும் விசேஷ மில்லே சாயபு—"இந்தகத்தியாலே நம்ப குத்திப் பார்க்கிறன் பாயி''—ஐயோ! சாயபு! ஜாக்கிரதை அப்படி ஒன்றும் செய்யாதீர்!—"ஆனகே,—அதுக்குள்ளே என்ன இருக்குது? நம்பொ பாக்கரான்''—மெல்ல சாயபு—"அரே, மொள்ள என்னத்கு சொல்ரான்?''—நான் ஏதாவது கோணியில் தூக்கிக் கொண்டு போனல் அதை நீங்கள் என்னவென்று பார்ப்பதற்கு உங்களுக்கு சுதந்தரமில்லே—"நம்பொ எப்படியும் பாப்பான்!—நீங்கள் பார்க்கக் கூடாது—"அரே! திவானு! நம்பள்கி என்னமோ சத்தம் கேக்குதுபாய்!—என்னுடைய பழந்துணிகள் இருக்கின்றன இதில்—"அத்தெ நம்பள்கி காட்டு பாயி!''—நான் காட்ட மாட்டேன்!—"காட்ட மாட்டெ?''—மாட்டேன்—"ஆனக்கே! உன்கி இந்த தடியாலே அடிப்பேன்''—அதற் கெல்லாம் நான் பயப்படுபவனல்ல—அரே! உன்கி புத்தி வரப் பண்ரா! (தடியால் கோணிப் பையைப் பொத்துகிறன்.) ஐஐயோ! ஐஐயோ! சாயபு! சாயபு! வேண்டாம்! வேண்டாம்—"நம்பொ மறுபடி பாக்கிரவரைக்கும் உனக்கி இது காபகம் இருக்கட்டும்! நம்பகிட்ட ரொம்ப் பேசனத்துக்கு உன்கு புத்தி காட்றென்!''—ஐயோ!—இந்தத் துலுக்கன் பாழாய்ப்போக!—அப்பா! (முதுகை தடைத்துக் கொள்ளுகிறன்.)

கேள. (பையிலிருந்து தலையை வெளியே நீட்டி) அப்பா! என் எலும்பெல்லாம் நொருங்கிப்போச்சுது!

கா. ஆ! நான் செத்துப்போகிறேன்!

கேள. என்முதுகில் ஏனடா அடித்தான் அவன்?

கா. பத்திரம்! பத்திரம்! (அவன் தலையைப்பைக்குள் அமுக்கி மூடிவிட்டு) பத்துப் பன்னிரண்டு சிப்பாய்கள் வருகிறார்கள் இதோ! [அநேகம்பெயர் ஒன்றாய்ப் பேசுவது போல் பேசுகிறன்). "வாருங்கள்! வாருங்கள்! இந்த கௌரிநாதனை எப்படியும் கண்டுபிடிக்கவேண்டும்! ஒரு மூலே முடிச்சு விடாமல் தேடிப்பார்ப்போம்! நம்முடைய செருப்பு தேய்ந்து போனலும் போகட்டும்!—ஒரு

இடத்தையும் விடாதீர்கள் !—எங்கேயும் நுழைந்து பாருங்கள். ஒரு பெருச்சாளி பொந்து கூட விடாதீர்கள்—நாம் எங்கேபோவோம் இப்பொழுது ?—இந்தப் பக்கம் போவோம் முதலில், இப்படித் திரும்புவோம் இல்லை, இப்படி இப்படி !—வலது புறம்—இடதுபுறம்—இல்லை இல்லை ! ஆமாமாம் !"—(சொந்த குரலுடன்) நன்றாய் ஒளித்துக் கொள்ளும்—(மாற்றி) "ஹா !தோழர்களே ! இதோ இருக்கிறான் அவனுடைய வேலையாள்—அடேய் யாரடா இங்கே ?—எங்கே உங்கள் எஜமான் இருக்கிறார் சொல்கிறாயா என்ன ?"—ஐயா ! என்னை அடிக்காதீர்கள் !—"ஆனால், உங்கள் எஜமான் இருக்கிற இடத்தைச் சொல்—சீக்கிரம் !—நாழி ஆகிறது—நிமிர்ந்துபார் ! சீக்கிரம் !" ஐயா, கொஞ்சம் தயவு பண்ணுங்கள்—(கௌரிநாதன் மெல்ல கோணிப்பையினின்றும் தலையை வெளியில் தூக்கிப்பார்த்து காளப்பன் கள்ளத்தனத்தை அறிகிறான்)'—"நீ உடனே உன் எஜமானர் இருக்கிற இடத்தை எங்களுக்குத் தெரிவிக்கா விட்டால் உன்னை அடி அடி என்று அடித்துக் கொன்று காலைவாரி இழுத்து விடுவோம் !"—ஐயா! என்னை என்ன வேண்டுமென்றாலும் செய்யுங்கள். என் எஜமானுக்குதுரோகம் செய்யமாட்டேன். "உன்னை உதைஉதை என்று உதைப்போம் !"—உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள்—"உனக்கு உதை தான் வேண்டும் போலிருக்கிறது!"—என் எஜமானைக் காட்டிக் கொடுக்க மாட்டேன்.—"ஆனால் இந்த சூட்டைவாங்கிக் கொள் !" (கோணிப் பையை அடிக்கத்திரும்புகிறான், இதற்குள்ளாக கௌரிநாதர் பையிலிருந்து வெளி வருகிறார், இதைக் கண்டதும் காளப்பன் ஓடிப்போய் விடுகிறான்.)

கௌ. படுக்காளிப்பயலே! அப்படியா சமாசாரம் ! திருட்டுக் கழுதை ! துரோகி ! இப்படி நீயா என்னை அடித்தாய் ?—

சரோஜநேத்ரி வருகிறாள்.

ச. அப்பா ! வெளியிலாவது வந்து கொஞ்சம் காற்று வாங்குவோம் !—சிரித்துச் சிரித்து வயிறெல்லாம் புண்ணாகி விட்டது ! (சிரிக்கிறாள்.)

கௌ. உம் ! என்னைப் பார்த்து நகைப்பதற்காக உன்னை என்ன பாடு படுத்துகிறேன் பார் !

ச. ஹா ! ஹா ! ஹா ! என்ன வேடிக்கை இந்தக் கிழவனை இப்படி ஏமாற்றியது.

கேள. இதிலென்ன வேடிக்கை யிருக்கிறது? இதற்காக நீ நகைப்பானேன்?

ச. என்ன?—என்ன சொல்லுகிறீர்கள் ஐயா?

கேள. என்னைப் பார்த்து நீ சிரிக்கக் கூடாதென்கிறேன்!

ச. உம்மைப் பார்த்தா?

கேள. ஆம்.

ச. இதென்ன! உம்மைப்பார்த்து நகைக்கிறேனு? கனவு காண்கிறீரா என்ன?

கேள. என் எதிரில் இவ்வாறு நீ நகைப்பானேன்?

ச. அதற்கும் உமக்கும் ஒரு சம்பந்தமு மில்லை. சற்று முன்பாக நான் கேட்ட மிகவும் வேடிக்கையான ஒரு கதையைக் குறித்து நான் சிரித்துக்கொண்டிருந்தேன், அந்த விஷயத்தில் நானும் ஒருவிதத்தில் சம்பந்தப் பட்டிருப்பதால் எனக்கு அப்படித் தோன்றலாம், ஒரு வேளை—ஆயினும், லோபியான தன் தகப்பனிடமிருந்து, ஒரு மைந்தன் கொஞ்சம் பணத்தைப் பிழிந்தெடுக்கச் செய்த இந்த சூழ்ச்சியைப்போல் நகைக்கத்தக்க கதை, இதற்கு முன் நான் கேட்டதேயில்லை.

கேள. ஒரு மைந்தன்,—தன் தகப்பனுரிடமிருந்து—பணத்தைப் பிழிந்தெடுக்க—

ச. ஆம்—அதை நீர் கேட்க விரும்பினுல் கேளும், சொல்லுகிறேன். என்னுல் அதை அடக்கிவைக்க முடியவில்லை. (நகைக்கிருள்.)

கேள. சொல், அந்தக் கதையைக் கேட்கிறேன்.

ச. சந்தோஷமாய். அதை உமக்குச் சொல்வதினுல் அதிக கெடுதியில்லை. ஏனெனில் அது சீக்கிரம் எப்படியும் வெளியாகி விடும். ஊர் ஊராய்ச் சுற்றி கூத்தாடிவரும் குறக் கூட்டத்தின் கையில் நான் சிக்கும்படி என் தலைவிதி இருந்தது. அவர்களுடன் நான் இந்த ஊருக்கு வர, ஒரு வாலிபன் என்னைக்கண்டு என்மேல் காதல் கொண்டார்; அது முதல், என்னை விடாது பின் தொடர்ந்தார்; வாய்திறந்து கேட்டவுடன் தங்கள் இச்சைக்கு இணங்குவார்கள் என்று எண்ணும் மற்ற வாலிபர்களைப்போல் முன்பு நடந்துப் பார்த்தார். ஆயினும் அதற் கெல்லாம் நான் இணங்காத படியால், முதலில் தான் கொண்ட தப்பான எண்ணத்தை விட்டார். அதன் பேரில், என்னைக்கைதியாக வைத்தி

ருந்த குறக் கூட்டத் தாரிடம், தான் என் மீது உண்மையில் காதல் கொண்டிருப்பதாகத் தெரிவிக்க, அவர்கள் தங்களுக்கு ஒரு தொகையை கொடுத்தால், என்னை அவரிடம் ஒப்புவிப்ப தாகத் தெரிவித்தார்கள். ஆயினும், இதில் நேர்ந்த கஷ்டம் என்ன வென்றால், என் காதலன், உயர் குலத் துதித்த அநேகம் வாலிபர்கள் தற்காலமிருக்கும் கஷ்டதிசையிலிருந்தார்—அதாவது, அவர் கையில் அந்தத் தொகையில்லாதிருந்தது. அவர் தகப்பன் செல்வ வந்தனா யிருந்தபோதிலும், ஒருபெரிய லோபி, அவரைப்போல் பிசுனாரி இந்த உலகத்திலேயே கிடையாது—கொஞ்சம் பொறும் கதையை முற்றிலும் கேளும்—அவர் பெயர் எனக்கு ஞாபகமில்லை—ஆ! கொஞ்சம் எனக்கு ஒத்தாசை புரியும்—இந்த ஊரில் எல்லாரைப் பார்க்கிலும் மிகுந்த லோபி என்று யாரைச் சொல்லுகிறார்கள்? அவர் பெயர் உமக்குத் தெரியுமா?

கௌ. தெரியாது.

ச. அதில்—என்னவோ—நாத—நாதன் என்று வருகிறது. கோ—கோபி—இல்லை இல்லை—கௌரி—ஆம்! ஞாபகம் வந்தது. கௌரிநாதன் அவர் பெயர், நான் சொன்னமடையன் அவர் தான்—பிறகு கதையை முடிக்கு மிடத்து—நானிருந்த குறக் கூட்டத்தார் இன்று இந்த ஊரைவிட்டுப் போகத் தீர்மானித் தார்கள்; தன் கையில் அவர்கள் கேட்டதைக் கொடுக்க பணமில்லாதபடியால், என் காதலன் என்னை இழந்தேயிருப்பார்—தன் தகப்பனாரிடமிருந்து இந்தத் தொகையைப்பெற அவரது வேலையாள் அவருக்கு உதவி செய்திராவிட்டால், அவர்வேலைக் காரன் பெயர் நன்றாய் ஞாபகமிருக்கிறது. அவன் பெயர் காளப் பன், அவன் நிரம்ப கெட்டிக்காரன். அவன் புத்தியை நான் மிகவும் புகழவேண்டும்.—

கௌ. (ஒருபுறமாக) ஆ! திருட்டுக்கழுதை! அப்படியா சமாசாரம்!

ச. அந்தக் கிழவரை மோசம் செய்ய அவன் செய்த சூழ்ச்சி ஈதாகும். ஹா! ஹா! ஹா!—அதைப்பற்றி நினைக்கும் பொழுதெல்லாம் எனக்கு அடங்காச் சிரிப்பு வருகிறது—ஹா ஹா ஹா!—இந்த லோபியான நாயிடம் போய்—ஹா ஹா ஹா!—துறைமுகப்பக்கமாய் தன் சின்ன எஜமானுடன் நடந்து போய்க் கொண்டிருந்தபொழுது, ஹா ஹா!—அவர்கள் ஒரு துர்க்கி

தேசத்து தோணியைக் கண்டதாகவும்—ஹா ஹா!—தோணியில் பலர் தங்களை அதைப் பார்வையிடும்படி அழைத்ததாகவும்—ஹா! ஹா!—அந்தத்தோணியின் தலைவன், தங்களுக்கு, சாப்பிடுவதற்குப் பலகாரம் எல்லாம் கொடுத்ததாகவும்—அதை அவர்கள் சாப்பிட்டுக் கொண்டிருந்தபொழுது—ஹா ஹா!—தோணியை ஓட்டி விட்டதாகவும், பிறகு—அந்த தூர்க்கி தேசத்தான்—தன்னை ஒரு சிறு படகில் போட்டு, கரைக்கு அனுப்பி, உடனே தன்னிடம் ஐந்நூறு பொன் அனுப்பாவிட்டால், அவருடைய மகனை, அரேபியா தேசத்துக்கு அடிமையாகக் கொண்டு போவதாகச் சொல்லி யனுப்பியதாகவும், அந்த லோபிக்குத் தெரிவித்தான். ஹா ஹா! இதைக் கேட்டவுடன்—இந்தப் பரம லோபி இடிவிழுந்தது போல் ஆகிவிட்டான்—ஒரு பக்கம் பிள்ளையின் பேரில் ஆசை, மற்றொரு பக்கம் பணத்தின் பேரில் ஆசை! இந்த மாதிரி இரண்டு பக்கமும் வலிக்கப் படவே என்ன செய்வான் பாவம்! இந்த ஐந்நூறு பொன்னைக் கேட்டது அவனை ஐந்நூறு தரம் பிச்வாவால் குத்துவது போல் இருந்தது!—ஹா ஹா ஹா!—இந்தப் பணத்தை விட்டுப் பிரிவதென்றால், அவன் உயிரையே கொடுப்பது போலிருந்தது. அதற்காக அந்தப் படுக்காளி எப்படியாவது பணம் கொடாதபடி தன் மைந்தனை மீட்க குத்ர யுக்திகளெல்லாம் செய்து பார்த்தான்—ஹா ஹா ஹா!—சமுத்திரத்தின் மீது அந்தத் தோணியை துரத்திக் கொண்டு போக போலீஸ் காரரை அனுப்புவதாயென்று யோசித்தான்!—ஹா ஹா!—அந்த வேலைக்காரனை ஜாமினாகப் போயிருக்கச் சொல்லி, பணம் கொடாதபடி தன் மைந்தனை மீட்டுக் கொள்ளப் பார்த்தான்!—ஹா ஹா ஹா!—முப்பது பொன் கூடப் பெறாத, நாலைந்து பழந் துணிகளைக்கொடுத்து அவைகளைவிற்று அந்த ஐந்நூறு பொன்னைக் கொடுத்து வரும்படி, வேலைக்காரனை அனுப்பப் பார்த்தான். ஹா ஹா ஹா! இந்த மாதிரி ஒவ்வொரு பிரயத்னம் செய்யும் பொழுதும், அவனது வேலையாள்—இது அசாத்தியமான காரியம் என்று தெரிவிக்க—அதைப் பற்றி தனக்கு ஞாபகம் வரும்போதெல்லாம்—"இந்தக் கழுதை அந்ததோணி பண்டை ஏன் போனான்? அந்தத் தோணி பாழாய்ப் போக! அந்த தூர்க்கி தேசத்தான் நாசமாய்ப் போக!" என்று கூவிக்

கொண்டிருந்தாலும்—பிறகு கடைசியில்—பணம் கொடாதபடி தப்பப்பன் முறை பிரயத்னம் செய்தும்—பயன்படாமற் போக வே—பெரு மூச்செறிந்து—கதறியழுது—என்ன நீர் இக்கதை யைக் கேட்டும் சிரிக்காமலிருக்கிறீரே? இதைப்பற்றி என்ன நினைக்கிறீர் நீர் ?

கேள. அந்த வாலிபன் ஒரு நன்றி கெட்ட நாய் ! அதனைப் பிரசங்கிக் கழுதை! என்று எண்ணுகிறேன்! அவன் தகப்பனாரை இப்படி மோசம் செய்ததற்காக தக்க தண்டனைக்குட் படுவான் என்று நினைக்கிறேன்! அந்தக் குறக்குட்டி, இப்படி இவ்விடம் வந்து யோக்கியமான ஒரு குடும்பத்தில் பிறந்த பிள்ளையைக்கெடுத்து கௌரவமுடைய பெரிய மனிதனை தூஷித்த வாயாடிநாரி என்று நினைக்கிறேன்! அந்த வேலைக்காரன், நாளைக் காலைக் குள் தூக்கு மரத்திற்கு அனுப்பவேண்டிய மகா பாதகன் என்று நினைக்கிறேன் ! (கோபத்துடன் போகிறார்.)

(மற்றொரு புறமாக செல்வநேசன் வருகிறான்.)

செ. எங்கே போயிருந்தீர் ?—இப்பொழுது நீர் பேசிக்கொண்டிருந் தது உம்முடைய காதலன் தகப்பனார் என்பதை அறிவீரா ?

ச. அப்படித்தான் இருக்கவேண்டுமென்று இப்பொழுது தான் என் புத்தியிற் படுகிறது. நான் யோசித்துப் பாராமல், அவ ருடன் பேச ஆரம்பித்தேன்— அவருடைய கதையையே அவ ருக்குச் சொன்னேன் !—

செ. என்ன ! அவர் சொந்த கதையையா ?

ச. ஆம் !—அதைக் கேட்டவுடன் எனக்கு சிரிப்படங்கவில்லை— யாருக்காவது சொல்ல வேண்டுமென்று அடக்க முடியாதபடி இச்சைகொண்டேன். ஆயினும் என்ன இப்பொழுது அத னால் ? அவருக்குக் கெடுதியேயன்றி, எங்களுக்கு இப்பொ ழுது இருப்பதைவிட ஒன்றும் கெட்டுப்போவதற் கில்லை யென்று எண்ணுகிறேன்.

செ. என்ன அம்மா ? கொஞ்சம் வாயை அடக்கிவைக்கக் கூடாதா ? தங்களுடைய குரலைத் தாங்களே கேட்பது மிகவும் இனிமையா யிருக்கவேண்டும். அதனால்தான் அநேகர் தங்கள் இரகசியங் களை அடக்கி வைக்க முடியாதவர்களா யிருக்கிறார்கள் போலும்.

ச. நான் கூறாவிட்டால், அவர் வேறு யாரிடமிருந்தாவது தெரிந்து கொள்ள மாட்டாரோ ?

அழகானந்தர் வருகிறார்.

அழ. அடேய் ! செல்வ நேசா !

சே. நீர் வீட்டிற்குள் போம்—என் எஜமானர் என்னை அழைக்கிறார். (சரோஜதளநேத்ரி போகிறாள்.)

அழ. அடே திருட்டுக் கழுதை! மற்றவர்களுடன் கூடி இத் திருட்டுத்தனம் நீயும் செய்திருக்கிறாய் ! நீ, காளப்பன், என் குமாரன், எல்லோரும் சேர்ந்து என்னை இவ்வாறு மோசம் செய்திருக்கிறீர்கள். இதை நான் சும்மாகப் பொறுத்துக் கொண்டிருப்பேன் என்று நினைத்தாயா ?

சே. சத்தியமாகச் சொல்கிறேன் எஜமானே ! காளப்பன் உம்மை ஏதாவது மோசம் செய்திருந்தால் அவனை இனி நான் பார்ப்பதுவு மில்லை ; இதற்கும் எனக்கும் சம்பந்தமு மில்லை யென்று உறுதியாய் நம்பும்.

அழ. எல்லாம் பார்ப்போம், திருட்டுப்பயலே, எல்லாம் பார்ப்போம் —என்னை இனி மோசம் செய்யமுடியாது.

கௌரிநாதர் வருகிறார்.

கௌ ஆ ! அழகானந்தரே ! எனக்கு பெரிய துர் அதிர்ஷ்டம் நேர்ந்தது.

அழ. எனக்கும் அப்படித்தான் நேர்ந்திருக்கிறது.

கௌ. அந்த திருட்டு நாய் காளப்பன், என்னிடமிருந்து மோசம் செய்து ஐந்நூறு பொன் அடித்துக் கொண்டு போய்விட்டான்.

அழ. அந்த திருட்டு நாய்தான், காளப்பன், என்னிடமிருந்தும், இருநூறுபொன் ஏமாற்றிக் கொண்டு போய்விட்டான்.

கௌ. இந்த ஐந்நூறு பொன் கொண்டு போனது மாத்திர மன்று ; என்னை மிகவும் அவமானப் படுத்தினான், அதைச் சொல்வதற்கும் வெட்கமாயிருக்கிறது—ஆயினும் எப்படியாவது அவன் மீது பழிவாங்குகிறேன்.

அழ. நானும் அவன் என்னை மோசம் செய்ததற்காகப் பழிவாங்க வேண்டுமென்று தீர்மானித்திருக்கிறேன்.

கௌ. எப்படியும் தக்கபடி அவனை சிட்சிக்க வேண்டும் நான்.

சே. (ஒரு புறமாக) அதில் எனக்கு ஒரு பாகமும் கிடைக்காதிருக்குமாக !

கௌ. இதனுடன் போகவில்லை அழகானந்தரே, நமக்கு ஒரு துர்அதிஷ்டத்தின் பின்னாக மற்றொரு துர் அதிஷ்டம் வருகிறது. இன்றைத் தினம் என்குமாரத்தியை நான் காண்பேன் என்று சந்

தோஷப்பட்டுக் கொண்டிருந்தேன், அவள் ஒருத்திதான் எனக்கு ஆறுதலை. என்னுடையஆள் மூலமாக, அவள், தாரா நகரத்தை விட்டு நெடுநாளாயதென்றும், அவள் ஏறிச்சென்ற கப்பலானது எங்கேயோமூழ்கி, அவள் இறந்து போயிருக்க வேண்டுமென்றும், இப்பொழுதுதான் எனக்கு சேதி வந்தது.

அழ. உம்முடனே உம்முடைய குமாரத்தியை இருக்கச் செய்து சந்தோஷிப்பதை விட்டு, அவளைத் தாரா நகரத்தில் ஏன் இருக்கச் செய்தீர்களென்று நான் கேட்கலாமோ ?

கேள. அதற்கு சில காரணங்கள் உண்டு, என் குடும்ப சம்பந்தமாய் எனது இரண்டாவது கலியாணத்தை நான் இரகசியமாய் வைத்திருக்க வேண்டி வந்தது—ஆயினும் இது யார் ?

நாராயணி வருகிருள்.

கேள. ஆ!—நீயா, தாதி ?

நா. (அவா பாதத்தில் விழுந்து) ஆ! எஜமானே! பண்டரிநாதரே!—

கேள. ஸ்! என்னை கௌரிநாதர் என்று அழை ; மற்றொரு பெயரை உபயோகியாதே. தாரா நகரத்தில் நான் வேறு பெயர் பூண வேண்டியிருந்த காரணம், இப்பொழுது இல்லை.

நா. ஐயோ, இம்மாதிரி நீர் வேறு பெயர் பூண்டது, உம்மை இவ்விடம் நாங்கள் கண்டு பிடிப்பதில், என்னென்ன கஷ்டங்களையும் கவலைகளையும் உண்டு பண்ணியது எங்களுக்கு!

கேள. என் பெண்ணும் அவள் தாயாரும் எங்கே?

நா. உம்முடைய குமாரத்தி அருகில்தான் இருக்கிருள்—ஆயினும் அவளை நீர் காணுமுன், அவள் விவாகம் செய்து கொள்வதற்கு நான் உடன் பட்டதற்காக நீர் என்னை மன்னிக்கவேண்டும்; உம்மைக் காணுதபடியால் அவளைக் காப்பாற்ற வேறு வகை யில்லாதவளாய்த் தத்தளித்தேன்.

கேள. என் பெண், விவாகஞ்செய்து கொண்டாளா !

நா. ஆம், ஐயா.

கேள. யாரை ?

நா. அஸ்வமேதவனெனும் இக்குள்ள ஓர் வாலிபனை; அவர் தகப்பன் பெயர் அழகா நந்தராம்.

கேள. ஈசனே !

அழ. என்ன எதிர் பாராத அதிர்ஷ்டம் !

கேள. எங்களை அழைத்துக்கொண்டுபோ, சீக்கிரம் அழைத்துக் கொண்டுபோ அவளிருக்குமிடம்.

நா. இதோ இந்த வீட்டிற்குள் நீங்கள் நுழைய வேண்டியதுதான்.

கௌ. வழிகாட்டு—வாரும் வாரும், அழகாநந்தரே. (செல்வநேசனைத் தவிர மற்றவர்கள் உள்ளேபோகிறார்கள்.)

செ. சரி!—என்ன ஆச்சரியமாய் முடிந்திருக்கிற தெல்லாம்!

காளப்பன் வருகிறான்.

கா. அடே, செல்வநேசா, எங்கே நம்மவர்களெல்லாம்?

செ. உனக்கு நான் இரண்டு புதிய சமாசாரங்கள் சொல்ல வேண்டும். ஒன்று அஸ்வதேவருடைய சங்கதி சந்தோஷமாய் முடிந்தது. நம்முடைய யாகசேனை, கௌரிநாதருடைய பெண்ணும்; தெய்வாதீனத்தால் அவள் தந்தை முடிக்க விரும்பிய படியே அவள் கலியாணம் முடிந்தது. இரண்டாவது சமாசாரம், இதோ இந்த இரண்டு பெரிய கிழங்களும், உன்மீது கொடும் பழி வாங்குவதாகப் பிரமாணம் செய்திருக்கிறார்கள்—முக்கிய மாக கௌரிநாதர்.

கா. உம்—அது ஒன்று மில்லை. இந்த பயமுறுத்தலுக்கெல்லாம் பயப்படுவனல்ல நான். இவைகளெல்லாம் எனக்கு தலைமேல் காற்றடிப்பது போல் சர்வ சாதாரணம்.

செ. உன்னை ஜாக்கிரதையாகப் பார்த்துக் கொள்; பிள்ளைகள் தங்கள் தகப்பன்மார்களுடன் சமாதானமாக போய் விடுவார்கள்; நீதான் தனியாக அகப்பட்டுக் கொள்வாய்.

கா. அதை யெல்லாம் எனக்கு விட்டு விடு; அவர்கள் கோபத்தை அடக்கும் மார்க்கம் எனக்குத் தெரியும்—அன்றியும்—

செ. போ போ! போய் விடு! அதோ அவர்கள் வருகிறார்கள். (காளப்பன் விரைந்து போகிறான்.)

கௌரிநாதர், அழகாநந்தர், நாராயணி, யாகசேனை வருகிறார்கள்.

கௌ. வா குழந்தாய், வா நம்முடைய வீட்டிற்குப் போவோம்; உன்னுடன் உனது தாயாரையும் பார்த்திருப்பேனாயின் என் சந்தோஷம் பூரணமாயிருக்கும்.

அழ. இதோ—அஸ்வதேவன் வருகிறான்—சரியான சமயத்தில்.

அஸ்வதேவனும் சரோஜதளநேத்திரியும் வருகிறார்கள்.

அழ. வா அப்பா, உனது விவாகம் சந்தோஷமாய் முடிந்ததற்காக ஈசனைக் குறித்துப் பிரார்த்திப்போம்—

அஸ் (யாகசேனையைப் பாராதவனாய்) தந்தையே, என்னை மன்னிக்க வேண்டும். என்னுடைய விவாகத்தைப்பற்றி நீர் கூறுவ தொன்றையும் நான் ஒப்புக்கொள்ள மாட்டேன். நான் யாரை மணம்

புரியத் தீர்மானித்திருக்கிறே னென்பதை நீர் இப்பொழுது அறிந்திருக்கிறபடியால், உம்மிடமிருந்து அதை நான் ஒளிக்க வேண்டியதில்லை இனி.

அழ. ஆமாம்—அது உனக்குத் தெரியாதே—

அஸ். எனக்குத் தெரியவேண்டிய தெல்லாம் நன்றாய்த் தெரியும்.

அழ. நான் உனக்கு சொல்லவந்த தென்னவென்றால், கௌரிநாதர் பெண்தான்—

அஸ். கௌரிநாதருடைய பெண்ணை நான் கண்ணெடுத்தும் பாரேன் எப்பொழுதும்.

கௌ. அவள்தான்—

அஸ். ஐயா, தாமும் என்னை மன்னிக்க வேண்டும்—நான் தீர்மானித்து விட்டேன்.

செ. கொஞ்சம் கேளும்—

அஸ். மாட்டேன்—என்னுடன் பேசாதே—நான் கேட்கவே மாட்டேன்.

அழ. உன்னுடைய மனைவி—

அஸ். இல்லை—அப்பா—என் கடைசிவார்த்தையைக் கேளும்—என் கண்மணியை விட்டு பிரிவதை விட, என்னுயிரை விட்டுப் பிரிவேன்! ஆ! இதோ! (அவளிருக்கு மிடம்போய் அவள் கரத்தைப் பற்றி) ஆம்—இனி உங்கள் இஷ்டப்படி நீங்கள் செய்யலாம். இப் பெண்மணியைத் தான் நான் மணந்தேன். இவளையன்றி வேறொரு பெண்ணைக் கண்ணெடுத்தும் பாரேன்.

அழ. சரிதான்!—சரிதான்! இப்பெண்ணைத்தான் உனக்குத் தாரமாகக் கொடுக்கிறோம். எப்பொழுது பார்த்தாலும் இப்படித்தான் தவறிழைக்கிறாய். தலைகால் தெரியாமல் பிடிவாதமாய் ஓடுகிறாய்.

யா. ஆம், பிராணநாதா, இவர் தான் என் தந்தை. இப்பொழுது தான் இவரைக் கண்டி பிடித்தேன்—நம்முடைய கவலையெல்லாம் ஒழிந்தது.

கௌ. வாருங்கள் எல்லோரும், எனதுவீட்டிற்குப் போவோம், இங்கே பேசு வதைவிட எல்லாம் சவிஸ்தாரமாக அங்கு பேசுவோம்.

யா. அப்பா, உம்மை நான் மிகவும் வேண்டிக் கொள்ளுகிறேன், என் மீது தயை கூர்ந்து இதோ இருக்கும் இப் பெண்மணியை விட்டு என்னை பிரிக்காதீர்; அவளது குணங்களை நீர் நன்றாய் அறிவீராயின், அவளை மிகவும் நன்கு மதிப்பீர் என்பதற்கையமில்லை.

கௌ. என்னை என் முகத்திற் கெதிரிலேயேவைத ஒரு பெண்ணையா நான் என் வீட்டிற்கு அழைத்துக் கொண்டு போவது ?

ச. ஐயா, உங்களுடைய மன்னிப்பை மனப்பூர்வமாக கேட்கிறேன். நீர் இன்னாரென் றறிந்திருந்தால் அவ்வாறு நான் பேசியிருக் கமாட்டேன்—உம்மைப்பற்றி நான் கேள்விப்பட்டதுதான்.

கௌ. என்ன கேள்விப்பட்டாய் ?

யா. என் சகோதரன் இப் பெண்மணியின் மீது இச்சைப் பட்டதில் தவறொன்று மில்லை—இப்பெண்மணி மிகுந்த கற்புடைய வள், அதற்கு நான் உத்தரவாதம்.

கௌ. அதெல்லாம் சரிதான்—இப்பெண்ணை என் குமாரனுக்கா நான் கலியாணம் செய்து கொள்ளவேண்டுமென்கிறாய் ? குலம் கோத்திரம் இல்லாத பெண்—ஊர்ஊராய்த் திரிந்து கொண்டி டிருக்கிறவள்—

லீலாநாதன் வருகிறான்.

லீ. அப்பா, ஊர்பேர் தெரியாத ஒரு பெண்ணின் மீது நான் காதல் கொண்டேன் என்று என்மீது குறை கூறுகிறீர். அவளுக்கு அந் தஸ்தும் ஆஸ்தியும் இல்லை யென்றும் கூறுகிறீர். இப்பெண்மணி இந்தப் பட்டணத்தில் தான் பிறந்தவளென்றும், ஒரு பெரிய அந்தஸ்துள்ள குடும்பத்தில் உதித்தவளென்றும், நான் எந்த குறக்கூட்டத்தாரிடமிருந்து இவளைமீட்டு வந்தேனோ, அவர்கள் இப்பொழுதுதான் எனக்குத் தெரிவித்தார்கள்; இவள் நான்கு வயது குழந்தையா யிருந்த பொழுது இவளைத் திருடிச் சென் றார்களாம், அப்பொழுது இவள் அணிந்திருந்த ஒரு கைவளை யை இதோ என்னிடம் கொடுத்திருக்கிறார்கள். இதைக் கொண்டு இவள் தாய் தந்தையரை நாம் கண்டுபிடிக்கலாம்.

அழ. ஹா! காட்டு இப்படிஅதை !(வாங்கிப் பார்த்து) இது என் பெண் ணுடையதே. ஆகவே இவள் தான் நான்கு வயது சிறு குழந் தையாயிருந்த பொழுது காணாமற் போன, என் குமாரத்தி என்பதற் கைய மில்லை.

கௌ. உம்முடைய குமாரத்தியா ?

அழ. ஆம், சந்தேகமே யில்லை. இவள் தான் ; முகஜாடையெல்லாம் அப்படியே யிருக்கிறது. இதில் அணுவளவேனும் சந்தேக மில்லை.

யா. ஈசனே ! என்ன ஆச்சரியங்களெல்லாம் நேரிடுகின்றன !

*காாளன் வருகிறான்.*

கா ஐயோ! எஜமான் மார்களே! மிகுந்த துக்ககரமான சமாசாரம் நேரிட்டது இப்பொழுது தான்!

கௌ. என்ன விசேஷம்!

கா. பாவம்—காளப்பன்! (அழுகிறான்)

கௌ. அந்தக் கழுதையைத் தான் தூக்கிலிடப்போகிறேன்!

கா. ஐயோ! எஜமானே, அந்தக் கஷ்டம் உங்களுக்கு வேண்டிய தில்லை. சற்று முன்பாக காளப்பன், மராமத்தாய்க்கொண்டிருந்த ஒரு கட்டடத்தின் கீழாகப் போய்க் கொண்டிருந்த பொழுது, மேலே இருந்த ஒரு கொல்லத்துக் காரனுடைய கெட்டப்பாறை, அவர் தலையில் விழ, மண்டை உடைந்து மூளையெல்லாம் வெளியில் வந்து விட்டது. அவர் மரணவஸ்தையில் விருக்கிறார். அவர் தன்னை உம்மிடம் தூக்கிக்கொண்டு போய் உங்களிடம் ஏதோ பேசவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறார்.

அழ. எங்கே அவன்?

(தலையெல்லாம்மிகவும் காயம்பட்டதுபோல் கட்டிக்கொண்டு இரண்டு பெயரால்தூக்கப்பட்டு, காளப்பன் வருகிறான்.)

கா. இதோ வருகிறார்.

கா. அப்பா! அப்பா!—எஜமான்மாரே!—என்னைப் பாருங்கள்!—ஐயோ! என் கதியைப் பாருங்கள்!—ஐயோ! நான் யார் யாருக்கு தீங்கிழைத்தேனோ, அவர்களுடைய மன்னிப்பை யெல்லாம் பெறுமல், நான் மரிக்க எனக்கிஷ்ட மில்லை!—ஹா!—ஆமாம் எஜமான்மார்களே!—என் உயிர் போகுமுன்—உங்களுக்கெல்லாம் நான் செய்த பிழைகளை மன்னிக்கும்படி என்மனப் பூர்வமாக—வேண்டிக் கொள்ளுகிறேன்—முக்கியமாக, அழகாநந்தரையும், கௌரிநாதரையும் மன்னிப்புக்கேட்டுக் கொள்ளுகிறேன், ஐயோ!—

அழ. என் வரைக்கும் உன்னை மன்னித்தேன்—மனதில் ஒன்று மில்லாமல் நிம்மதியாய் மரிப்பாயாக.

காள. ஐயா, உங்களுக்குத்தான் நான் பெரும் பிழை இழைத்தேன்—அந்தத் தடியால் அடித்தது—

கௌ. அதைப்பற்றி ஒன்றும் பேசாதே—நானும் உன்னை மன்னித்து விட்டேன்.

காள. நான் செய்தது மிகவும் துணிகரமான வேலை—நான் அந்தத் தடியால் அடித்தது—

கௌ. அதைப்பற்றி இனி ஒன்றும் பேசவேண்டாம்.

காள. நான் மரிக்கும்பொழுது—என்ன துக்கமாய் இருக்கின்றது தெரியுமா ?—அந்தத் தடியைப் பற்றி நினைக்கும்பொழுது—

கௌ அடே ! போதுமடா ! பேசாமலிரு !

காள. அந்த பெருத்த தடியால், உம்மை நான் அடித்தது—

கௌ. அடே ! வாயைத் திறக்காதே!—நான் எல்லாவற்றையும் மறந்து விடுகிறேன்.

காள. ஹா ! மிகவும் சந்தோஷம் !—ஐயா, நான் தடியாலடித்ததை வாஸ்தவத்தில் மன்னித்து விடுகிறீர்களா ?—

கௌ. ஆம் ! ஆம் ! இனி ஒன்றைப்பற்றியும் பேசாதே !—நீ செய் ததை யெல்லாம் மன்னித்துவிட்டேன். அதெல்லாம் முடிந்து விட்டது.

காள. அப்பா ! எஜமானே ! அந்த வார்த்தையானது எனக்கு மிகுந்த ஆறுதலைத் தருகின்றது.

கௌ. ஆயினும் நீ ஒரு நிபந்தனைக்கு உட்படவேண்டும். நீ உடனே இறந்து போகவேண்டும்.

கா. என்ன எஜமானே ?

கௌ. நீ பிழைப்பாயாயின், என் வார்த்தையை மீட்டுக்கொள்வேன்.

காள. ஹா ! ஹா ! எனக்கு மறுபடியும் மூர்ச்சைவருகிறது !

அழ. கௌரிநாதரே, நாம் எல்லாம் இவ்வளவு சந்தோஷத்தை அடைந் தற்காக, நிபந்தனை ஒன்றுமில்லாமல் இவனை முற்றிலும் மன் னித்து விடும்.

கௌ. சரி, அப்படியே யாகட்டும்.

அழ. வாருங்கள் நாம் எல்லோரும்போய்—ஒன்றாய் மணவிருந்து சாப்பிடுவோம்.

காள. (தன் தலைக்கட்டுகளை யெல்லாம் அவிழ்த்துவிட்டு எழுந்துநின்று) ஆமாம் !—நான் சாகுமளவும் மணவிருந்தே சாப்பிட்டுக் கொண்டிருக்கிறேன் !

காட்சி முடிகிறது.

